# தமிழ் மூலத்தில்
# தமிழ் - சமற்கிருத அகராதி
## (1600 சொற்கள்)


**ம. சோ. விக்டர்**






**யாத்திசைப் பதிப்பகம்**

50, அண்ணா நகர்

அரியலூர் – 621 713

அலைபேசி: 98432 73914

தமிழ் மூலத்தில் தமிழ் – சமற்கிருத அகராதி
(1600 சொற்கள்)

Dr. Ma.So. Victor, M.A., Ph.D.,
Cell : 98432 73914



முதற்பதிப்பு : 2012

பக்கம் : 192
படிகள் : 1200

பதிப்பு :
**யாத்திசைப் பதிப்பகம்**
50, அண்ணா நகர்
அரியலூர் - 621 713
அலைபேசி: 98432 73914

வடிவமைப்பு :
எஸ். தனசேகர்

விலை : **200. 00**

அச்சிட்டோர்:
**ஸ்ரீராகவேந்திரா லேசர் பிரிண்டர்ஸ்**
15, தானப்ப தெரு, திருவல்லிக்கேணி,
சென்னை - 600 005.
தொலைபேசி : 044-42664695, 90031 81586

**செம்மொழிச் சித்தர், முதுமுனைவர், செந்தமிழ் அந்தணர் இளங்குமரனாரின் சான்றுரை**

# வெற்றியர் திரு. விக்டர்

**இரா. இளங்குமரன்**

திருவள்ளுவர் தவச்சாலை,

அல்லூர் – 620 101.

திருச்சி மாவட்டம்.

தமிழ்த் திருவாளர் ம.சோ. விக்டர் அவர்கள் அரிய தமிழ்ப் பற்றாளர்; ஆழ்ந்த ஆய்வாளர், பாவாணர் கருத்துகளில் பயின்ற தோய்வாளர்; அவர் கண்ட கொள்கைகளைப் பலப்பல நூல்களால் நிறுவி வரும் மொழி நல மீட்பாளர்.

தமிழன் தோன்றிய குமரிக் கண்டம்;
அவன் பேசிய மொழி தமிழ்;
அத்தமிழே உலக மொழிகளின் தாய்மொழி;
தமிழே ஆரியத்துக்கு மூலம்;
திராவிட மொழிகளுக்குத் தாய்மொழி ஆவது தமிழே;

என்னும் கொள்கைகளை உலகப் பேரறிவர் சான்றொடும் உள்ளார்ந்த ஆய்வொடும் நிறுவுவதே தமது வாழ்வாகக் கொண்டு, அசைக் கொணாச் சான்றுகளுடன் நூல்களைப் படைத்தவர் பாவாணர்.

திரு. ம.சோ. விக்டர் அவர்கள், தம் ஆழிய ஆய்வொடும், கால வளர்ச்சியாலும் தம் உள்ளொளியாலும் மேலும் மேலும் அக்கொள்கைகளை நிறுவ ஐம்பதுக்கும் மேற்பட்ட நூல்களைப் படைத்துவரும் தமிழ்த் தாயின் தவப்புதல்வர். அவர் தம் நூல்களை இயல்பான ஓட்டத்தில் தடையின்றிக் கற்கவும்

தெளிவுறவும் வாய்ப்பாம் வகையில், வனப்புற ஓர் ஒழுங்கில், நல்ல கட்டமைப்பில் அச்சிட்டு, உலகத் தமிழர்க்குக் கொடையாக வழங்க வல்ல "யாத்திசைப் பதிப்பகமாம்.

திரு. ம.சோ. விக்டர் அவர்கள் பன்மொழிப் புலமையாளர்; நுனிப்புல் மேயாத நுண்ணிய கல்வியர். தொல்காப்பியச் செல்வம், சங்க நூல்வளம், திருக்குறள் தோய்வு, காப்பியக் கவின் யாவும் ஒருங்கே கைவரப் பெற்றவர். புலமையர் வழக்கோடு பொதுமக்கள் வழக்கையும் ஊன்றி அறிந்து, உரிய வகையில் போற்றும் ஆற்றலர். இயல்பான ஆற்றோட்ட நடையில் எழுதவும் வல்லவர். ஆதலால், தம் பெயரை நிறுவுவார் போல், "வெற்றி" மேல் வெற்றிப் படைப்புகளைச் செய்து வருகின்றார்.

"க" என்னும் எழுத்துப் பற்றி விளக்கி ஒரு நூல்,
"எல்-யா" என்னும் இருமை ஒரு சொல் பற்றி ஒரு நூல்,

உலகளாவிய தமிழ், உலக மொழிகளில் தமிழின் வேர்ச் சொற்கள், எபிறேய மொழியில் தமிழின் வேர், தமிழும் சமற் கிருதமும், தமிழும் செமிட்டிக் மொழியும், இந்திய மொழிகளின் தாய் தமிழே, பஃறுளி - யூப்ரடீசு, குமரிக்கண்டம், குமரிக்கண்டமும் ஆப்பிரிக்கக் கண்டமும், தமிழும் ஆரியமும், மேற்கிலும் தமிழ், வாழும் தமிழ், தமிழ் மணம், சேயோன், சேயன், தமிழரின் எண்ணியல், வானியலும் தமிழரும், சிந்துவெளி நாகரிகம், தமிழும் எபிறேயமும், பாபிலோனியர் தமிழ், தமிழ்நாட்டுக் கிறித்துவம், இசுலாம் தமிழர் சமயமே என அடுக்கடுக்காக ஆய்வு நூல்களைப் படைத்து வருபவர்.

பன்முகப் பார்வைப் படைப்பவராம் திரு. ம.சோ. விக்டர், நன்முகத் தோற்றத்தர்; நவில் தோறும் நயமாம் நூல்போல், பழகுந்தொறும் "தேனோடு பால் கலந்த" இனியர். தமிழ்த் தொண்டரை மதிப்பவர். தமிழ்த் தொண்டரொடு தாமும் தொண்டராய் ஊன்றி நிற்பவர். மேலும் மேலும் அவர் படைப்புகள் தமிழ் வளமாய்த் தொடருமாக! இன்பமே மல்குக.

**இரா. இளங்குமரன்**

# ஆசிரியர் உரை

உலகின் பன் மொழிகள் பற்றிய சிந்தனை கடந்த 300 ஆண்டுகளாக மென்மேலும் வளர்ந்து வருகின்றது. கடந்த நூற்றாண்டில் அது பல்லாற்றானும் வளர்ந்து, புதுப்புது செய்திகளை அறிவிக்கும் பொலிவினைப் பெற்றது. இந்த நூற்றாண்டின் தொடக்கம், கடந்த காலத்தில் சொல்லப்பட்ட மொழிகள் தொடர்பான செய்திகளில் மேலும் புதிய கண்ணோட்டத்தைப் பெற்றுள்ளது. பல கொள்கைகள் தலைகீழ் மாற்றங்களுக்கும் வித்திட்டுள்ளன. பல்வேறு அறிஞர் களால் வெளிக் கொணரப்படும் செய்திகள், மொழிகள் தொடர்பான பல கமுக்கங்களை வெளிச்சம் போட்டுக் காட்டு கின்றன. இதுநாள் வரையிலும் ஏற்கப்பட்டிருந்த பல கொள் கைகள், தலைகீழ் மாற்றங்களைப் பெற்று வருகின்றன.

இந்திய மொழிகள் பற்றிய அறிஞர்களின் பார்வை, கடந்த நூற்றாண்டுகளைக் காட்டிலும் இப்போது தெளி வடைந்துள்ளது. இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இந்திய மொழிகளுக்குத் தாய் மொழியாகவும், முதன் மொழி யாகவும் சமற்கிருதம் கருதப்பட்டது. சமற்கிருதத்திலிருந்தே தமிழ் உள்ளிட்ட இந்திய மொழிகள் யாவும் கிளைத்தன என்ற கொள்கை ஏற்கப்பட்டிருந்தது. தொல்காப்பியம் உள்ளிட்ட தமிழ் இலக்கியங்களில் காணப்படும் சமற்கிருதச் சொற் களைச் சுட்டிக்காட்டி, தமிழ் சமற்கிருதத்தின் கிளை மொழியே என்றும், சமற்கிருதச் சொற்களின் உதவியின்றி தமிழ் தனித்துச் செயல் பட முடியாதென்றும் உறுதி செய்யப் பட்டது.

சென்ற நூற்றாண்டின் தொடக்கத்தில் அறியப்பட்ட சிந்துவெளி நாகரிகம் கூட ஆரிய நாகரிகமே என உறுதி செய்யப்பட்டு, இந்தியாவின் மூத்த குடிகள் ஆரியரே என்றும் அறிவிக்கப்பட்டது. 1924 முதல் 1931 ஆம் ஆண்டுவரை நீடித்த

இந்த உறுதிப்பாடு, 1931 ஆம் ஆண்டில் அசைக்கப்பட்டது. அருள்தந்தை ஈராஸ் பாதிரியார், சிந்துவெளி நாகரியம் ஆரிய நாகரிக மன்று என்ற தமது முடிவினை முதன்முதலாக அறிவித்தார். அது தமிழர் நாகரிகமே என உறுதி செய்து, இந்தியாவின் மூத்த குடியினர் தமிழரே (திராவிடரே) என்ற அதிர்வினைக் கொடுத்தார். இதற்குச் சான்றாகப் பல்வேறு செய்திகளை வரலாற்றுக் கண்ணோட்டத்தில் இணைத்துக் காட்டினார். அதன்பிறகு ஆய்வாளர்கள் இரு கூறாகப் பிரிந்தனர். ஆரியச் சார்பு, திராவிடச் சார்பு என இருநிலைப் பாடுகள் வளர்ந்தன. இந்தியாவின் மூத்த மொழி சமற்கிருதமே என்ற கொள்கையும் ஆட்டம் கண்டது.

அச்சூழலில், சமற்கிருதம் தனியொரு மொழியென்றும், அது வட இந்திய மொழிகளுக்குத் தாய்மொழியென்றும், தமிழ் தென்னிந்திய மொழிகளுக்குத் தாய் மொழியென்றும் கருதி, அக்கருத்தினை உறுதி செய்தனர். சமய நோக்கில் தமிழும் சமற்கிருதமும் நோக்கப்பட்டன. சிவனுடைய உடுக்கை யினின்றும் பக்கத்துக் கொன்றாக தமிழும் சமற்கிருதமும் வெளிப்பட்டன என்ற புதிய கருத்தை வெளியிட்டனர். இதன்மூலம் இவ்விரண்டும் வெவ்வேறு மொழிகள் என்று அடையாளப் படுத்தப்பட்டன. சிவன் தமிழ்க் கடவுளே என்பதை மறந்து, சிவனிடமிருந்தே இவ்விரு மொழிகளும் தோன்றின என்று கூறியதால், தமிழிலிருந்தே சமற்கிருதம் தோன்றியது என்ற கருத்து முன் வைக்கப்பட்டது. தமிழே சிவன் என்றும். முதல் தமிழ் கழகத்தைத் தோற்றுவித்தவர் சிவனே என்றும் கூறப்படுவதால், சிவன் அல்லது தமிழ் உருவாக்கிக் கொடுத்த மொழியே சமற்கிருதம் என்று தமிழ் அறிஞர்கள் புது விளக்கங்களைக் கொடுத்தனர்.

ஆனாலும் தமிழினின்றே சமற்கிருதம் கிளைத்தது என்பதற்கானச் சான்றுகளைத் தெளிவாகக் கூறும் சூழ்நிலை அப்போது தோன்றவில்லை. இக்கொள்கையை மெய்ப்பிப் பதற்கான சமற்கிருதப் புலமைபெற்ற தமிழறிஞர்கள் அப்போது இல்லாமற் போயினர். இருப்பினும் ஏராளமான தமிழ்ச் சொற்கள் சமற்கிருத மொழியில் காணப்படுகின்றன என்ற செய்திகளை ஆய்வுகள் வழியே வெளிப்படுத்தி வந்தனர்.

தமிழால் சமற்கிருதத்தின் உதவியின்றித் தனித்தியங்க முடியும் என மறைமலை அடிகள் மெய்ப்பித்துக்காட்டினார். சமற் கிருத மொழியில் நூற்றுக்கு நாற்பது தமிழ்ச் சொற்கள் உள்ளனவென்று பாவாணர் கூறினார். மேலும் பல்வேறு அறிஞர்களும் இரிக்கு வேதம் உள்ளிட்ட ஆரிய இலக்கியங் களில் ஏராளமான தமிழ்ச் சொற்கள் உள்ளனவென்பதை வெளிப்படுத்தினர்.

ஆரியரின் வருகை, சமற்கிருத மொழியின் தோற்றம் வளர்ச்சி போன்ற வரலாற்றுப் பின்னணிகளை, ஆரியர்கள் மறைத்து வைத்திருந்தனர். அவ்வரலாற்று உண்மைகளையெல் லாம் அவர்கள் அழித்தும் விட்டனர். இதனால் ஆரியம் பற்றிய செய்திகளை மற்றவர் அறிய இயலாத நிலையில், ஆரியர்கள் தம்மைப் பற்றிக் கூறிய வைகளையெல்லாம் பிறகு நம்ப வேண்டியிருந்தது. ஆனால் தற்காலத்தில் வளர்ந்து வரும் ஆய்வுகள், இந்திய வரலாற்றை மூடியிருந்த திரைகளை விலக்கி வருகின்றன. பிறர் அறியக் கூடாது என திட்டமிட்டு அழிக் கப்பட்ட செய்திகளைத் தாண்டி, ஆரிய இலக்கியங்களிலேயே மேலும் பல செய்திகள் அவர்களது வரலாற்றை அறிய உதவு கின்ற சான்றுகள் உள்ளனவென்பதை அறிவித்து வருகின்றனர்.

சமற்கிருதம் ஒரு தனி மொழியென்றே இதுவரையிலும் கூடத் தமிழறிஞர்கள் கருதி வந்துள்ளனர். தமிழ்ச் சொற்களின் கலப்பு சமற்கிருதத்தில் பரவிக் கிடப்பதைக் குறிப்பிடும் தமிழ் அறிஞர்கள், அது ஒரு கிளை மொழியே எனக் கூறத் தயங்கி வந்துள்ளனர். தமிழை அறிந்திருந்தவர்கள் கூட, தமிழின் வேர், மூலம் போன்ற துறைகளில் ஈடுபாடு கொண்டிராத காரணத் தால், சமற்கிருத மொழியைத் தெளிவாக நோக்க இயல வில்லை. சமற்கிருதச் சொற்கள் பலவும் இன்று தனித்தனியாக ஆய்வு செய்யப்படுகின்றன. ஆய்வுகளில் வியத்தகு உண்மைகள் வெளிவந்த வண்ணமுள்ளன.

ஆரியர்கள் தம் இனத்தைப் பற்றித் தாங்களே பதிவு செய்துள்ள செய்திகளில் உள்ள நம்பகத் தன்மை நாளுக்கு நாள் குறைந்து கொண்டே வருகின்றது. தங்களைப் பற்றிப் பெருமையாகவும், பல இடங்களில் கற்பனைக் கெட்டாத செய்திகளை வரலாற்றுச் சான்றுகள் போலவும் பதிவு செய்

துள்ளனர். சிந்துவெளியில் வாழ்ந்திருந்த தமிழர்களை (திராவிடர்களை) போரில் வென்று, தென்னிந்தியாவுக்குள் துரத்தியடித்து, சிந்துவெளியில் மிகச் சிறந்த நாகரிகத்தை உருவாக்கியதாகக் கூறிக் கொண்டனர். ஆரிய இலக்கியங்களை உன்னிப் பார்த்து ஆய்வு செய்யுங்கால், அவர்கள் எக்காலத்தும் போர் நடவடிக்கைகளில் ஈடுபட்டதற்கானச் சான்றுகளே கிடைக்கவில்லை. வல்லாண்மை மிக்க சிந்துவெளிப் பேரரசுகளை, மிகச் சிறு அளவிலான ஆரியக் குழுக்கள் வெற்றி கண்டன என்பது நகைப்பிற்கிடமான செய்தியாகும். பொய்ச் செய்திகளை உண்மையென உலகிற்குக் காட்ட ஆரியர்கள் மேற்கொண்ட உத்திகள் வெற்றி பெற்றன. அக்காலத்தில் அவர்கள் இலக்கியங்களைப் பயன்படுத்திக் கொண்டார்கள். இக்காலத்தில் ஊடகங்களைப் பயன்படுத்தி வருகின்றனர். இன்று இந்தியாவின் வலிமைமிக்க ஊடகங்கள் அவர்களிடமே இருப்பதால், உண்மைச் செய்திகள் உலகிற்குத் தெரியாத வகையில் பார்த்துக் கொள்கின்றனர்.

சமற்கிருதம் தனிமொழியன்று என்பதையும், அது தமிழின் கிளைமொழியே என்பதையும் இந்நூல் நிலைப்படுத்த முற்பட்டுள்ளது. ஒரு மொழியிலுள்ள சொற்களின் வேரும், அவ்வேர் விரிந்த மூலமும், அம்மூலம் விரிந்த சொற்களும், அம்மொழியிலேயே அறியப்படுமானால், அம்மொழி தன் மொழியென்றும், முதன் மொழியென்றும் கருதப்படும். சமற்கிருதத்திலுள்ள பல்லாயிரம் சொற்களுக்கான வேர்ச் சொல், அம்மொழியில் இல்லையென்பதை உணரவேண்டும். வேர்ச் சொற்களாகக் காட்டப்படும் சொற்களும் கூட, தமிழ் வேரினையே தொட்டு நிற்கின்றன என்ற உண்மையை, தெரிந்தே மறைத்துள்ளனர். இதற்கான பல்வேறு எடுத்துக் காட்டுகளையும் கூற இயலும்.

சமற்கிருத மொழியின் அகர வரிசைப்படி அமைந்துள்ள 1600 சொற்கள் இவ்வகராதி நூலில் விளக்கப்பட்டுள்ளன. மேலும் பலவாயிரம் சொற்களையும் தமிழ் மூலத்தில் மெய்ப்பிக்கவும் இயலும். இந்நூல் அம்முயற்சியில் ஒரு தொடக்கமாக அமைந்துள்ளது. மொழியை ஆய்வு செய்யும் மாணவர்களுக்கும், தமிழ் ஆர்வலர்களுக்கும் இந்நூல் பெரிதும் பயன்படும்.

இதனை ஓர் உந்துதலாகக் கொண்டு, எதிர்காலத்தில் பலரும் இந்துறையில் ஈடுபாடு கொள்ள வேண்டும் என்பதே இந்நூல் தொகுக்கப்பட்டதற்கான அடிப்படை நோக்கமாகும். தமிழ் மீது படிந்துள்ள தூசுகளைத் துடைத்து, தமிழ்ச் சொற்களை வெளிச்சத்துக்குக் கொண்டு வருவதும் மற்றொரு நோக்க மாகும்.

இந்நூலை வடிவமைத்து அச்சிட்டு உதவிய ஸ்ரீராக வேந்திரா லேசர் பிரிண்டர்ஸ் நிறுவனத்துக்கும் எனது நன்றி.

**ம. சோ. விக்டர்**

# முன்னுரை

உலகில் பேசப்படும் ஒவ்வொரு மொழிக்கும் ஒரு வரலாறு உண்டு. அதுபோலவே அம்மொழியைப் பேசுகின்ற இனத்துக்கும் ஒரு வரலாறு உண்டு. இந்த இலக்கணத்துக் குட்படாத மொழிகளும் உலகில் உண்டென்றாலும், அவை கலப்பினங்களால் தோன்றிய கொச்சை மொழிகளாகவே அறியப்படும். அவற்றிற்கு எழுத்துகளோ இலக்கண நெறி முறைகளோ இருப்பதில்லை. அவை செம்மொழி என்ற தகுதியையும் பெற்றிருப்பதில்லை. செம்மொழித் தகுதியுடைய மொழிகள் உலகில் சிலவே அறியப்பட்டாலும், அவை உண்மையில் செம்மொழித் தகுதியுடைவைகளா என்பதும் ஐயத்திற்குரியவைகளே.

ஒரு மொழி செம்மொழித் தகுதியுடையதாக ஏற்றுக் கொள்ளப் படுவதற்கு அறிஞர்கள் பல்வேறு தகுதிகளைக் காட்டுகின்றனர். மிகப் பழமையானதாகவும், பரவலான மக்களால் பேசப்பட்ட, பேசப்படும் தகுதியுடையதாகவும், பல்வேறு இலக்கண நெறிமுறைகளை முறையாகக் கொண் டவையாகவும், இலக்கியச் செறிவுகள் நிறைந்ததாகவும், மன்னர்களும் மற்றவர்களும் போற்றிப் பாதுகாத்த பெருமை மிக்கதாகவும், குறைந்தது ஈராயிரம் ஆண்டுகளுக்கு முற்பட் டதாகவும், இன்றும் பேச்சு, எழுத்து வழக்கில் உள்ளதாகவும், புதிய காலமாற்றங்களுக்குத் தகுதியுடையதாகவும் இருக்க வேண்டுமெனக் கூறுவர்.

உலக அளவில் செம்மொழிகளாக கிரேக்கம், எபிறேயம், இலத்தீன், சீனம், ஆங்கிலம், சமற்கிருதம் ஆகியவை இன்று ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளன. ஆங்கிலம் கடந்த காலத்திய மொழிகளைத் தன்வயப்படுத்திக் கொண்டு ஐநூறு ஆண்டு களுக்கு முன்பு உருப் பெற்ற மொழியாகும். கிழக்கிலும் மேற் கிலும் பல்வேறு குடியேற்றங்களைக் கொண்டிருந்த ஆங்கிலே

யருக்குத் தமது மொழியை உலககெங்கும் பரப்புவதற்கான வாய்ப்புகள் கிடைத்தன. ஆங்கிலேயர் போன்றே, போர்த்துக்கீசியரும், ஸ்பானியர்களும் பெருமளவில் அமெரிக்க நாடுகளில் தமது மொழிகளை அறிமுகம் செய்தனர். ஆங்கிலம் உள்ளிட்ட ஐரோப்பிய மொழிகள் அனைத்தும் இலத்தீன் மொழியின் கிளைகளே எனலாம். இலத்தீன், கிரேக்கத்தின் குழவியாகும்.

தமிழ், இந்திய அரசால் செம்மொழியாக அறிவிக்கப்பட்டுள்ளது. உலக அளவில் செம்மொழித் தகுதி இன்னும் தமிழுக்கு வழங்கப்படவில்லை. **ஒரு மொழி செம்மொழி என அறியப்படுவதற்கு, அம்மொழியிலுள்ள சொற்களுக்கான வேர்ச்சொற்கள், அம்மொழியிலேயே அறியப்படல் வேண்டும் என்ற ஒற்றைத் தகுதிமட்டுமே போதுமானது. இத்தகுதி உலக மொழிகளில் தமிழைத் தவிர வேறு மொழிகளுக்கு இல்லை யென்பதை உணர்தல் வேண்டும்.** ஆனாலும் தமிழுக்குரிய பழமையும், இலக்கிய இலக்கணச் செறிவுகளும், வளங்களும் உலகத்தாரால் இன்னும் உணரப்படவில்லை. கடந்த ஈராயிரம் ஆண்டுகளாகத் தமிழை அழிக்கவும் நசுக்கவும் தொடுக்கப்பட்ட அழுத்தங்களையும் தாண்டி, இன்றும் உயர் தனிச் செம்மொழியாக தமிழ்மொழி வளர்ந்து வருகின்றது.

தமிழுக்கு உலக அளவில் உரிய இடம் கிடைக்காமற் போனதற்குப் பல்வேறு கரணியங்கள் உள்ளன. மூன்று கழகங்களை உருவாக்கி வளர்க்கப்பட்ட தமிழ் மொழி, கடந்த ஈராயிரம் ஆண்டுகளாக ஆள்வோரின் அரவணைப்பு வட்டத்துக்குள் வரவில்லை. தமிழ் அறிஞர்களாலும், ஆர்வலர்களாலும், மக்களாலும் மட்டுமே தமிழ் வளர்க்கப்பட்டது. ஒரு மொழியின் உயர்வுக்கு ஆள்வோரின் அரவணைப்பு முதற் கரணியமாகும். அது தமிழுக்குக் கிடைக்காமற் போனாலும், தமிழின் தனித்தகுதியால் இன்றும் தலை நிமிர்ந்து நிற்கின்றது. எக்காலத்தில் தோன்றியது என அறியப்படாத மூப்பும் முதுமையும் கொண்ட தமிழ்மொழியோடு, உலகின் எம்மொழியையும் இணைத்துப் பார்க்க இயலாது.

சமற்கிருதம் என்ற மொழியின் தோற்றமும் வளர்ச்சியும் வரலாற்றுக் கண்ணோட்டத்தில் அறியப்பட்டதாகும். கி.மு.

1500 ஆண்டுகளில் சமற்கிருதம் என்ற மொழி உருவாக்கப் பட்டது கி.மு. 12000 - 2000 ஆண்டுக்கால அளவுகளில் வடஇந்தியப் பகுதிகளில் முறையான ஆட்சியும், நாகரிக வளர்ச்சியும், உலகளாவிய வணிகத் தொடர்புகளும் கொண் டிருந்த தமிழ்ப் பேரரசுகள், எவ்வகையான உட்பகையும், புறப்பகையுமின்றி சிறப்புற்றிருந்தன. இந்திய நாடெங்கும் தமிழ் மொழியே பேசப்பட்டது. கி.மு. 1800 ஆண்டுகளில் தமிழரின் ஆட்சி முடிவுக்கு வந்தது. இயற்கையின் பல்வேறு சீற்றங்களுக்கு இரையான சிந்துவெளிப் பகுதி, நாடாக இணைக்க இயலாத அளவுக்கு சிதறிப் போயிற்று. சிந்துவும் அதன் கிளை ஆறுகளும் வட இந்தியப் பகுதிகளை அழித்தன. அவ்வாறு ஏற்பட்ட வெள்ளப் பெருக்குகளால் தொடர்ந்து வலுவிழந்து வந்த தமிழரின் நாகரிகம் அரப்பா அரசு வெள் ளத்தால் அழிந்து போனதோடு முற்றுப் பெற்றது. முறையான ஆட்சி முறையால் மக்களை இணைக்க இயலவில்லை. கி.மு. 1800 - 1500 ஆண்டுகளில் வட இந்தியாவில் பல்வேறு மாற்றங்கள் நிகழ்ந்த காலமாகும். இக்கால அளவில் தான் ஆரிய இனம் வடபுலத்தில் நுழைந்தது.

ஆரியர்கள் யார்? எக்கரணியம் கொண்டு அவர்கள் இந்தியாவுக்குள் புகுந்தனர்? அவர்களது தாய்மொழி யாது? என்பன போன்ற கேள்விகளுக்கு வரலாற்றில் இதுவரைத் தெளிவான விடைகள் கிடைக்கவில்லை என்றாலும் அண்மைக் கால ஆய்வுகள் அந்த கமுக்கங்களையெல்லாம் விலக்கி வருகின்றன. அரப்பா அழிவுக்குப் பின்னரே ஆரியரின் வருகை அறியப்பட்டது. ஆரியர் மிகப் பெரிய அளவில் புலம் பெயர்ந்தனர் என்ற கருத்தும் இன்று ஏற்கப்படவில்லை. சிறுசிறு குழுக்களாகவே அவர்கள் இந்தியாவுக்குள் நுழைந் தனர். ஆரியர்கள் பெருங்குழுவாக இருந்ததில்லை. கால் நடை களை மேய்த்து வளர்ப்பதையே தொழிலாகக் கொண்டிருந்த ஆரியர்கள், பெருங்குழுவாக இருந்திருக்கவும் வாய்ப்புகள் இல்லை. ஆரியரின் இந்திய வருகையால், வட இந்தியாவில் எந்த மாற்றமும் நிகழ்ந்து விடவில்லை. இப்படியொரு இனம் வெளி நாட்டிலிருந்து வந்திருப்பது பற்றிய செய்திகளும் கூட மக்களில் பலருக்குத் தெரிந்திருக்க வாய்ப்பில்லை. ஆனாலும் வெள்ளைத் தோலுடன் இருந்த ஆரியர்கள், தமிழர்களால் உற்று நோக்கப்பட்டனர். கால்நடைகளை வளர்க்கும் தமது தொழிலையே இந்தியாவிலும் ஆரியர்கள் மேற் கொண்டனர்.

அதற்கானச் சான்றுகள் இரிக்கு வேதத்திலும் காணப்படுகின்றது. ஆரியருடைய கால்நடைகளையெல்லாம் விரித்திரன் என்ற தலைவன் கவர்ந்து கொண்டு போய்விட்ட செய்தியை வேதம் விளக்குகின்றது.

தொன்மைக் காலம் தொட்டு சிந்து வெளியில் அறியப் பட்டிருந்த தமிழ் எழுத்துகளை, கி.மு. 1500 ஆண்டுகளில், மாற்றம் செய்ய அறிஞர்களில் சிலர் முடிவெடுத்தனர். பழமை வாய்ந்த அவ்வெழுத்துகளை, அந்நாகரிகம் அழிந்த சூழல் களில், மாற்றியமைக்க எடுக்கப்பட்ட முடிவுகள், புதிய காலத் தில் அம்மக்கள் நுழைந்ததையே காட்டுகின்றது. ஆள்வோரின் அரவணைப்பில்லாத தமிழ் மொழியை அறிஞர்கள் கையி லெடுத்தனர். பல்வேறு நிலைகளிலும் தமிழ்மொழிக்குப் புத்துணர்ச்சி ஊட்டப்பட்டது. அதன் ஒரு விளைவே, எழுத்துச் சீர்திருத்தம் ஆகும். சிந்துவெளியில் அறியப்பட்டிருந்த தமிழ் எழுத்துகளுக்குப் புதிய வடிவமும் உருவமும் தரப்பட்டன. சுருக்கமாகக் கூறவேண்டுமெனில், எழுத்து வடிவங்கள் எளிமைப் படுத்தப்பட்டு, பொது மக்களும் பயன்படுத்தும் வகையில் மாற்றி அமைக்கப்பட்டன. புதிய எழுத்துகளால் குழப்பம் வந்துவிடக் கூடாது என்பதைக் கவனத்தில் கொண்ட அறிஞர்கள், பழைய எழுத்து முறையையும் சில நூற்றாண்டுகள் இணைத்தே பயன்படுத்தி வந்துள்ளனர். பழைய - புதிய எழுத்துகளைக் கொண்ட சொற்களும் சொற்றொடர்களும் அண்மையில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இம்முறை ஈழத் திலும் கூட நடை முறைப் படுத்தப்பட்டது. ஒரு கற்பாறையில் எழுதப்பட்டுள்ள "தீவுகோ" என்ற சொல், பழைய - புதிய எழுத்துகளால் பொறிக்கப்பட்டுள்ளது.

இவ்வாறு தோற்றுவிக்கப்பட்ட புதிய எழுத்துமுறை பற்றி அறிந்துகொள்ள, இன்று ஏராளமான சான்றுகளும் கிடைத்துள்ளன. இம்மாற்றங்கள் கி.மு. 1800 - 1500 ஆண்டு களில் மேற்கொள்ளப்பட்டன என்பதற்கானச் சான்றுகளை, போணீசியர்களின் வரலாற்றில் அறிய முடிகின்றது. இந்தி யாவில் புதிய எழுத்துகள் நடைமுறைப்படுத்தப்பட்டதை அறிந்த போணீசியர்கள், மேற்கிலும் ஒரு புதிய முறையைத் தோற்றுவிக்க எண்ணினர். அதுவரையில் மேற்கே அறியப் பட்டிருந்த எழுத்து முறைகளுக்குப் பதிலாக புதிய முறையை அங்கே அறிமுகம் செய்தனர். தமிழில் அறியப்பட்ட 12 + 18 =

30 எழுத்துகளை மேலும் சுருக்கி 22 ஆகக் குறைத்தனர். விடுபட்ட 8 எழுத்துகளுக்கான ஒலிகளை கோடிட்டும், புள்ளி யிட்டும் சரி செய்தனர். எனவே, போணீசிய எழுத்துமுறையில் 30 ஒலிகளும் 22 எழுத்துகளும் இருந்தன. இந்த எழுத்து முறையை போணீசியர்களே கண்டுபிடித்தனர் என்று தவறாகக் கருதிய கிரேக்கர்கள் அம்முறைக்கு போணீசியா கிராமாத்தா (Phoenicia Grammata) என்ற பெயரைச் சூட்டினர்.

உண்மையில் இந்தியாவின் புதிய எழுத்து, முறையையே, போணீசியர்களும் ஏற்றுக் கொண்டனர். இம்முறை இந்தியர்களுக்கு எளிதாய் இருந்தது போலவே, மேற்கித்திய மக்களுக்கும் எளிமையாக இருந்ததால், அதுவரையிலும் அப்பகுதியில் வழக்கிலிருந்த எழுத்துமுறைகள் விடை பெற்றுக் கொண்டன. குறிப்பாக எபிறேய மொழி அறிஞர்கள், போணீ சியரின் எழுத்துமுறையை ஏற்றுக் கொண்டனர். கி.மு. 850 ஆம் ஆண்டில் மேச (Mesha) என்ற யூத மன்னன் வெளியிட்ட அரசாணையில் காணப்படும் எழுத்துகள், கி.மு. 250 ஆண்டு களில் அசோகன் வெளியிட்ட ஆணைகளில் காணப்படு கின்றன. இந்த ஒற்றுமையை அண்மைக் காலத்தில்தான் கண்டுபிடித்தனர். (அசோகன்தான் புதிய எழுத்துகளை உருவாக்கினான் என்று தமிழகத் தொல்லியல் துறை இப்போதும் கூறி வருவது, எந்த அளவுக்கு தொல்லியில் துறை ஆய்வு மனப்பான்மையுடன் செயல்பட்டு வருகின்றது என்பதை விளக்கும்)

இந்தியாவில் தமிழ் அறிஞர்களால் உருவாக்கப்பட்ட புதிய எழுத்துமுறைதான், இன்று உலகின் பெரும்பாலான மொழிகளுக்கான எழுத்துகளாக உருமாற்றம் பெற்றுள்ளன என்பதை அறியலாம். (ஆசிரியரின் மேற்கிலும் தமிழ் என்ற நூலில் விரிவாக விளக்கப்பட்டுள்ளது) உலக மொழிகளுக் கெல்லாம் தனது சொற்களை வாரி வழங்கிய தமிழ் மொழி, இறுதியாகத் தனது எழுத்து வடிவங்களையும் கொடுத்து உதவி யுள்ளது என்பதே உண்மை நிலையாகும். போணீசியர்கள் தங்களுடைய வணிக நலன்களுக்காகவே தமிழ் எழுத்து முறையை எடுத்துக் கொண்டனர். (போணீசியர்கள் தொல் தமிழ் மரபினரே என்ற ஆய்வுக் குறிப்புகளை ஆசிரியரின் பல்வேறு நூல்களில் காண்க) புதிய எழுத்து முறை அறிமுகம் செய்யப்பட்ட கி.மு. 1800 - 1500 ஆண்டுகளில்தான் ஆரிய

இனம் இந்தியாவுக்குள் நுழைந்திருக்க வேண்டும். ஆரியரின் இந்திய வருகைக்கு முன்பே கூட இம்மாற்றங்கள் நிகழ்ந்திருக்க வாய்ப்புகள் உண்டு. எனவே, புதிய தமிழ் எழுத்து முறைகளுக்கும் ஆரியருக்கும் எவ்வகையான தொடர்புகளும் இல்லையென்பது இன்று மெய்ப்பிக்கப்பட்டுள்ளது. ஆனால் பிற்காலத்திய ஆரியர், அப்புதிய எழுத்துமுறையைத் தாமே கண்டு பிடித்ததாக கூறிக் கொண்டனர். வரலாற்றில் பதிவு செய்யப்பட்டுள்ள அச்செய்தி, எவ்வளவு மோசடியானது, சூது நிறைந்தது என்பதை அறியலாம். தமிழ் அறிஞர்கள் பலகாலம் உழைத்து உருவாக்கிய தமிழ் எழுத்துமுறையை, தாங்களே உருவாக்கியதாக ஒரு வரலாற்றுப் புரட்டைச் செய்த ஆரியர்கள், அப்புதிய எழுத்துமுறைக்குப் பிராமி என்ற பெயரைப் பிற்காலத்தில் சூட்டினர். தற்காலத்து தொல்லியல் துறையைச் சார்ந்தவர்கள், ஆரியர்களுக்குச் சார்பான நிலைப் பாட்டையும் எடுத்துள்ளனர். அசோகன் பிராமி, ஆரியப் பிராமி, தமிழ்ப் பிராமி என்றவாறு இந்திய எழுத்துமுறை களை இன்று வகைப்படுத்துகின்றனர். (தமிழகத் தொல்லியல் துறையை தமிழ் உலகம் என்றுமே மன்னிக்காது) ஆரியப் புரட்டுக்கு வக்காலத்து வாங்கும் தொல்லியல் துறையின் புரட்டையும், பொய்யென்பதை இன்று நாம் மெய்ப்பித்துள் ளோம்.

கி.மு. 1500 ஆண்டுகளில் தமிழர்களால் உருவாக்கப்பட்ட புதிய எழுத்துமுறையின் அடிப்படையில் ஒரு புதிய மொழியும் உருவாயிற்று. சிந்துவெளி நாகரிகம் அழிவுற்ற காலங்களில் (கி.மு. 1800), இந்தியாவுக்கும் மேலை நாடுகளுக்கும் இடையே பெருமளவிலான வணிகம் நடை பெற்று வந்தது. வணிகத்தின் பரிமாற்றங்களில் அறியப்பட்டிருந்த குழப்பங்களும் போட்டி களும், வணிகத்தில் பல சிக்கல்களைத் தோற்றுவித்தன. (இதனைச் சரி செய்யவே போனீசியர்கள் முயன்றனர்) இச்சிக் கல்களைச் சரி செய்ய, உலக அளவிலான வணிகர்களுக் கிடையே பொதுவான குறியீடுகளும், சொற்களும் தேவைப் பட்டன. எடை அளவுகளும் ஒன்றாக இருக்க வேண்டுமென எதிர்பாக்கப்பட்டது. இதன் அடிப்படையில், தமிழ்ச் சொற் களைச் சுருக்கி, கமுக்கச் சொற்களாக்கி, அதுமற்றவருக்குப் புரியாத அளவில் ஒரு கமுக்கமான சுருக்கு மொழியை தமிழ் வணிகர்கள் தமக்கென உருவாக்கிக் கொண்டனர். அதுதான் சமற்கிருத மொழியின் தொடக்கமாகும். அத்தொடக்காலம்

கி.மு. 1800 - 1500 எனக் கொள்ளலாம். அம்மொழிக்கு அப்போது சமற்கிருதம் என்ற பெயர் அறியப்படவில்லை.

வணிகர்களுக்காகத் தொடங்கப்பட்ட அல்லது உருவாக் கப்பட்ட அந்த கமுக்க மொழி பிறர் அறியக் கூடாத செய்தி களைக் குறிப்பதற்குப் பயன்பட்டது, அடுத்த நிலையாகும். சிந்துவெளி நாகரிகம் முடிவுற்ற நிலையில், நிலையான அரசுகள் இல்லாது, வட்டாரக் குழுக்களின் தலைவர்கள் எழுச்சி பெற்றனர். வட பகுதி முழுவதும் இவ்வாறான குழுத் தலைவர்களால் கையகப் படுத்தப்பட்டன. இவர்களுக்குள் தோன்றிய போட்டிகள், போர்களாக வெடித்தன. அடுத்த ஆயிரம் ஆண்டுகள் (நந்தர்கள் காலம் வரையில்) குழப்பங்கள் மிகுந்திருந்த காலமாகும். வணிகத்துக்குப் பயன்பட்ட சொற்கள், அரசியலுக்கும் பயன்படுத்தப்பட்டன நந்தர்கள் காலத்தில், அரசாங்கத்தின் கமுக்க மான செய்திகள், இச்சுருக்க மொழியில் பதிவு செய்யப்பட்டன. அப்போது அவையெல் லாம் புதிய தமிழ் எழுத்துகளிலேயே எழுதப்பட்டன. எழுத்துகள் புரிந்தாலும், சொற்களின் பொருளைப் புரிந்து கொள்ள இயலாது. இம்மொழிக்கென விதிகளோ, முறை களோ இல்லாத நிலையில், எழுதியவரே புரிந்து கொண்டு படிக்கின்ற அளவில் அம்மொழி இருந்தது. இவ்வாறான பதிவுகளைச் செய்ய தனி அலுவர்களை அரசுகள் உருவாக்கிக் கொண்டன. நந்தர்கள் காலத்தில் இவ்வாறான பதிவுகளைச் செய்ய தனி அலுவலர்கள் இருந்தனர். பாலத்தீனம் போன்ற மேலைநாடுகளில் இப்பதிவுகளை மேற்கொள்ள தனி அலுவலர்கள் பணியாற்றிய செய்திகள் மேலை இலக்கியங் களில் காணப்டுகின்றன. அப்பதிவாளர்களை, குறிப்பாளர்கள் (Scribes) என்றே அழைத்தனர்.

வணிகம் தொடங்கி, அரசியலுக்குள் நுழைந்த அம்மொழி, அடுத்த நிலையில் சமயத்துக்குள்ளும் புகுந்தது. அப்போது தோன்றியிருந்த சமண சமயம், அக்கமுக்க மொழியைப் பயன்படுத்தத் தொடங்கியது. பின்காலத்தில் தங்களுக்கென ஒரு மொழியை சமணர்கள் உருவாக்கிக் கொண்டனர். புத்த சமயத்தின் தொடக்கமும் அம்மொழியைச் சார்ந்தே அறியப்பட்டு, பின்னர் பாலி மொழி புத்த சமயத் துக்கென அறியப்பட்டது. புதிய மொழி தோன்றி ஏறக்குறைய ஆயிரம் ஆண்டுகள் வரையிலும், ஆரியர்கள் அம்மொழியை

அறியாதிருந்தனர். சமணமும் புத்தமும் கைவிட்ட அம்மொழி யை, ஆரியர்கள் பிற்காலத்திலேயே கையிலெடுத்தனர். ஆரியச் சமயத்தின் மொழியாகவே தொடக்கத்தில் அதனைப் பயன் படுத்தினர்.

புதிய அந்தக் கமுக்க மொழி, தமிழ்ச் சொற்களைச் சுருக்கியே உருவாக்கப்பட்டது. அக்காலத்திய அம்மொழியின் சொற்கள் அனைத்தும் தமிழ்ச் சொற்களின் சுருக்கங்களே. ஆயிரம் ஆண்டுக் கால வளர்ச்சியில், ஒரு வளர்ந்த மொழியாக அது உருப் பெறவில்லை. ஆரியர்களின் பயன்பாட்டிற்கு வந்தபிறகும் கூட புதிய மாற்றங்களையோ வளர்ச்சியையோ அம்மொழி பெறவில்லை. நந்தர்கள் ஆட்சி நீக்கப்பட்டதற்கு ஆரியர்களின் பங்களிப்பு பெருமளவில் இருந்தது. இக்கால அளவில் ஆரியர்களின் நிலைப்பாடு ஏறக்குறைய உறுதிப் பாட்டுடன் இருந்தது. மோரியர் ஆட்சி தோன்றிய காலத்தில் வருகைதந்த அலெக்சாந்தரின் இந்திய நுழைவு அம்மொழியில் பெரிய மாற்றத்தைத் தோற்றுவித்தது.

அலெக்சாந்தர் கிரேக்கத்துக்குத் திரும்பிய போதிலும், கிரேக்கப் படையினரில் பலர் இந்தியாவில் தங்கியிருந்தனர். செலுகஸ் என்ற படைத்தலைவன் தனது மகளை சந்திரகுப் தனுக்கு மணமுடித்துக் கொடுத்தான். அலெக்காந்தருடன் வந்திருந்த பல கிரேக்க அறிஞர்களில் சிலர் இந்தியாவிலேயே தங்கிவிட்டனர். இந்திய ஆரியர்களைக் கண்ட கிரேக்கர்கள் அவர்களோடு உறவு கொண்டனர். ஆரியர்களின் நிறமும், அவர்களது இனமும் கிரேக்கர்களோடு தொடர்புடையன என்பதை உணர்ந்த கிரேக்கர்கள், ஆரியர்களோடு இரண்டறக் கலந்தனர். ஆரியர்கள் பயன்படுத்திய சமய மொழியில், ஆயிரக்கணக்கான கிரேக்கச் சொற்களைக் கலந்தனர். அதன்பிறகு புதிய பொலிவுடன் உருவான மொழியே சமற்கிருதம் எனப்பட்டது. சமற்கிருதம் என்பது ஆரியர்களின் தாய்மொழி + தமிழ் + கிரேக்கம் ஆகியவை இணைந்த ஒரு கலப்பு மொழியாக உருவாயிற்று. ஆரியர்களின் தாய் மொழியிலும் (அது இட்டைட் (Hittite) என்ற மொழியோடு தொர்புடையது என்பதை அண்மையில் கண்டு பிடித்துள்ளனர்), கிரேக்க மொழியிலும் ஏராளமான தமிழ்ச் சொற்கள் இருந்தன வென்பதை அறியலாம். பழைய தமிழ்த் திரிபுச் சொற்களும், தமிழும் கலந்து உருவான மொழியே சமற்கிருதம் ஆகும்.

இம்மொழியை கிரேக்க அறிஞர்கள் செம்மைப் படுத்திக் கொடுத்தனர். பழைய மொழியிலிருந்த குறைகள் நீக்கப் பட்டன. சமற்கிருதம் என்பதற்கு, செம்மைட் படுத்தப்பட்ட மொழி (Refined language) என்பதே பொருளாகும்.

தமிழ்ச் சொற்களைக் கொண்டு தமிழர்களால் உருவாக்கித் தரப்பட்ட ஒரு புதிய மொழி, கிரேக்கக் கலப்பால் புதுப் பொலிவு கண்டது. ஒரு புதிய மொழியைத் தோற்றுவிப்பதற் கான அறிவுப் பின்புலம் என்றுமே ஆரியர்களுக்கு இருந்திருக் கவில்லை என்பதை உணர வேண்டும். கிரேக்கருக்குப் பின் வந்த ஹூணர்கள், குஷானர்கள் போன்றோரும் ஆரியருடன் நெருங்கிய உறவைக் கொண்டிருந்தனர் (வெள்ளை நிறமே காரணமாகும்). இவ்வாறு கிறித்துப் பிறப்பாண்டுகளுக்கு அடுத்த நூற்றாண்டுகளில் சமற்கிருதம் ஒரு மொழியாக உருவெடுத்தது.கி.பி இரண்டாம் நூற்றாண்டுகள் வரையிலும் கூட, சமற்கிருதத்துக்கென தனியாக எழுத்துவடிவம் இருந் திருக்கவில்லை என்பதால், சமற்கிருதம் புதிய மொழியே என்ற கருத்தை உணர்த்தும்.

கி.பி. 200 ஆண்டுகளுக்கு முற்பட்ட சமற்கிருதக் குறிப்புகள் அனைத்தும் எழுத்துச் சீர்திருத்தத்தின் புதிய எழுத்து வடிவத்திலேயே பதிவு செய்யப்பட்டன. பாணினி எழுதிய அட்டத்தியாயி என்ற நூலும் சமற்கிருத எழுத்தில் எழுதப்பட்டதன்று. சமற்கிருதத்துக்கு எழுத்து வடிவம் தோன்றிய பிறகு அவையெல்லாம் சமற்கிருத எழுத்துவடிவில் மாற்றம் செய்யப்பட்டன. இந்த எழுத்துகளும் கி.பி. 200 முதல் 1200 வரையிலான கால அளவில் புதுப்புது வடிவங்களைப் பெற்றன. கி.பி. 1700 களில் கூட சில மாற்றங்கள் நிகழ்ந்ததாக கல்வெட்டுகளை மேற்கோள்காட்டி ஆய்வாளர்கள் உறுதி செய்கின்றனர்.

சமற்கிருத மொழியின் தோற்றம் பற்றிய செய்திகளை அறிய வேண்டுமானால் போணீசியரின் வரலாற்றை முழுவது மாகத் தெரிந்து கொள்ள வேண்டும். அப்போது அம்மொழியின் தோற்றத்துக்கான பின்புலத்தை அறிய முடியும். இந்தியாவில் அதற்கானச் சான்றுகளை எந்த இலக்கியமும் தெரிவிக்காத நிலையில், சமற்கிருத மொழியின் தோற்றத்தை போணீசியக் குறிப்புகளிலிருந்தே பெற வேண்டியுள்ளது. மாக்சுமுல்லர்

போணீசிய வரலாற்றை ஆய்ந்தறிந்தவர். அதனாலேயே, சமற் கிருத மொழி வரலாற்றை எழுதும் போது, போணீசியர்கள் பற்றிய செய்திகளைக் குறிப்பிடுகின்றார். போணீசியர்கள் ஆரிய இனத்தவர்களே என்றும் மாக்சு முல்லர் கருதினார். இந்திய மொழியியல் அறிஞர்கள் போணீசியப் பின்புலம் பற்றிச் சரியாக அறிந்திருக்கவில்லை. இப்போதும் கூட அதுபற்றிய சிந்தனை, தமிழ் அறிஞர்களிடையே காணப்படவில்லை.

அதுபற்றியே சமற்கிருதம் தன்னிலே உருவான மொழி யென்றும், தமிழும் அதன் கிளைமொழியென்ற தவறான முடிவுகளை எடுத்தனர். கிரேக்கர்கள் இந்தியாவுக்கு வந்த போது, சமற்கிருத மொழியில் காணப்பட்ட கிரேக்கச் சொற் களைக் கண்டு வியந்தனர். ஆரியர்கள் தம் மரபினரே என்பதை அறிந்து மகிழ்ந்தனர். இரண்டு மொழிகளிலும் சொற்கள் எவ்வாறு ஒன்று பட்டுள்ளன என்பதற்கான காரணம் அவர் களுக்குப் புரியவில்லை. தம் முன்னோர்கள் இந்தியாவிலிருந்து மேற்கே புலம் பெயர்ந்தவர்களாக இருப்பார்கள் எனவும் கருதினர். அதனால் இந்திய சமற்கிருதத்தைத் தங்கள் மூத்த மொழியாக ஏற்றுக் கொண்டனர். இந்திய ஆரியர் இந்தி யாவின் தொன்மக்குடிகளே என்றும் கருதினர். கிரேக்கர்களின் வருகை மேலை நாடுகள் பற்றிய செய்திகளை ஆரியருக்குப் புலப்படுத்தின. கிரேக்கர்களின் நம்பிக்கையை உறுதிப்படுத்தும் வகையில், தம்மை இந்தியாவின் தொன்மக்குடிகள் என்று பதிவுகளும் செய்துவைத்தனர்.

ஆனால் பதினெட்டாம் நூற்றாண்டில் இந்தியாவுக்கு வருகை தந்த மாக்சு முல்லர் போன்றவர்கள், தங்களுடைய இனமும் ஆரிய இனமே என உறுதி செய்து கொண்டனர். இந்திய இலக்கியங்களில் காணப்பட்ட வானியல், கணக்கியல், ஓகம், சமயம் போன்ற அறிவு சார்ந்த துறைகளை ஆரியரே கண்டுபிடித்து உலகிற்கு அளித்தனர் என்ற கருத்தை மாக்சு முல்லர் கொண்டிருந்தார். இரிக்கு வேதத்தில் சொல்லப் பட்டுள்ள வானியல் தொடர்பான செய்திகளை ஆரியரே உலகிற்கு முதன் முதலில் அறிவித்தனர் என்று மாக்சுமுல்லர் உறுதியாக நம்பினார். அவருக்குப் பின் வந்த வில்லியம்ஸ் மோனியர் என்பார் மாக்சு முல்லரைக் காட்டிலும் அறிவு செறிந்தவர். மூன்று இலக்கம் சொற்களைக் கொண்ட சமற்கிருத அகராதியைத் தொகுத்தார். மாக்சு முல்லருக்குப்

பலவகையிலும் மாறுபாடான சிந்தனைகளைக் கொண்டிருந்த மோனியர், இரிக்கு வேதத்தில் சொல்லப்பட்டுள்ள வானியல் தொர்பான செய்திகளுக்கும் ஆரியருக்கும் எவ்வகையான தொடர்பும் இல்லையென அறிவித்தார். ஆரியர்கள் பஞ்சாபில் குடியேறுவதற்கு 4000 ஆண்டுகளுக்கு முன்பே, இந்தியர்களே வானியல் குறிப்புகளை பதிவு செய்திருந்ததாகவும், அச்செய்திகளை ஆரியர்கள் இரிக்கு வேதத்தில் இணைத்துக் கொண்டதாகவும் குறிப்பிடுகின்றார். அவர் தொகுத்த சமற்கிருத அகராதியில் காணப்படும் பல்லாயிரம் சொற்களின் வேரைப் பற்றிய விளக்கங்களும் இடம் பெற்றுள்ளன. அவ்வேர்ச் சொற்கள் யாவும் தமிழ் வேர்களாகவே உள்ளதை அறியலாம். பல சொற்களுக்கு அவரால் வேரினைக் காட்ட இயலவில்லை. நீரையும் நிலத்தையும் குறிக்கும் த்ர (Dra - tra) என்ற சொல்லுக்கான மூலம் தெரியவில்லை என்று குறிப்பிடுகிறார். தரை, திரை என்ற தமிழ்ச் சொற்களே சமற்கிருத மொழியில் திரிந்துள்ளன என்பதை, மோனியரால் அறிய இயலாத நிலையில், அச் சொற்களுக்கான தெளிவான விளக்கத்தைக் குறிப்பிடாமல், அச் சொற்களுக்குப் பக்கத்தில் ஒரு கேள்விக் குறியைப் போட்டுள்ளார். மோனியரின் சமற்கிருத அகராதியில், பெரும்பாலான சொற்களை, கிரேக்கத்துடன் ஒப்பிட்டுக் காட்டுவதை அறியலாம். சமற்கிருதம் - கிரேக்கம் - இலத்தீன் - ஆங்கிலம் என்ற வழியில் பலநூறு சமற்கிருதச் சொற்கள் விளக்கப்பட்டுள்ளன. இதன் மூலம் சமற்கிருதமே முதன் மொழி யென்ற கருத்து விதைக்கப்படுகின்றது. மேற்கண்ட மொழிகளில், சமற்கிருதத்துக்கு முன் தமிழை வைத்துப் பொருள் கூற எவரும் முன் வரவில்லை.

மோனியர் கூறும் விளக்கங்களின் அடிப்படையில், சமற்கிருதச் சொற்களுக்கான மூலமும் வேரும் தமிழில் இருப்பதை உண்மையில் மோனியர் புரிந்துகொள்ளவில்லை. தமிழ் மொழியின் ஆழத்தை இதுவரை எந்த ஐரோப்பியரும் அறிந்திருக்கவில்லை. பிரான்சிஸ் ஒயிட் எல்லிஸ் மட்டுமே தமிழின் ஆழத்தை ஒரளவு அறிந்திருந்தார். அதனைத் தனது பல்வேறு கட்டுரைகள் அல்லது குறிப்புகள் மூலம் வெளிப்படுத்தியிருந்தார். (அக்குறிப்புகளை பேரா. முனைவர் மருதநாயகம் கண்டறிந்து, அவற்றைப் படி எடுத்து வைத்துள்ளார். எல்லிசின் வியத்தகு தமிழ் மொழி ஆற்றலை நூல்களாக வெளியிடும் முயற்சியிலும் ஈடுபட்டுள்ளார். அவ்வரிய

முயற்சியினை மேற் கொண்டு வரும் முனைவர் மருத நாயகம் அவர்களுக்குத் தமிழகம் நன்றிக்கடன் பட்டுள்ளது).

ஒவ்வொரு சமற்கிருதச் சொல்லையும் உன்னிப் பார்த்து, அதன் பொருளை அறிந்து, அச் சொல்லுக்கான வேர்ச் சொல் தமிழில் இருப்பதை அறிய முடிகின்றது. வேர்ச் சொல்லை அறிந்து கொள்ளும் வித்தகம் தமிழருக்கே தெரியாத போது வெளிநாட்டவர் எவ்வாறு அறிந்திருக்க இயலும்! மொழியியல் வரலாற்றில் இதுவரை எவருமே அறிந்து வெளிப்படுத்தாத வேர்ச் சொல் சூத்திரத்தைப் பாவாணர் கண்டு பிடித்தார். இது மொழியியல் வரலாற்றில் மிகப் பெரிய திருப்பமாகும். தமிழ்மொழியில் உள்ள ஒரு சொல்லின் வேர் எது, அவ்வேர் எவ்வாறெல்லாம் விரிவடைந்து எவ்வாறு பல்வேறு சொற் களை உருவாக்குகின்றது என்ற கண்டுபிடிப்பை பாவாணர் அளித்தார். இந்த சூத்திரம் தமிழ் மொழியிலுள்ள சொற்களை மட்டுமன்று, உலகின் எம்மொழியிலுள்ள சொற்களின் மூலத் தையும் அறியப் பயன்படும். இது மொழியியலில் அறிவியல் கலந்த கண்டுபிடிப்பாகும். பாவாணரின் வேர்ச் சொல் சூத்திரத்தைக் கொண்டு உலகின் எம்மொழிச் சொற்களையும் விடுவிக்கலாம்.

ஒரு சொல் தமிழ்ச் சொல்லா அல்லது சமற்கிருதச் சொல்லா என்று கண்டுபிடிக்க பாவாணருக்கு முன்பு எந்த அளவு கோலும் பயன்படுத்தப்படவில்லை. இதனால் ஆயிரக் கணக்கான தமிழ்ச் சொற்களை, சமற்கிருதச் சொற்களாகக் கருதினர். காரணம், சமற்கிருதத்திலும் தமிழிலும் ஒரு சொல் அறியப்பட்டால், அது சமற்கிருதச் சொல்லே எனக் கூறிவிடுவர். சமற்கிருத மொழியில் அச்சொல்லுக்கான மூலச் சொல் உண்டா அல்லது வேர்ச் சொல் உண்டா என எவரும் எண்ணிப் பார்ப்பதில்லை. வையாபுரிப் பிள்ளை சொன்னார், உ.வே. சாமிநாதையர் கூறினார் என்று கூறி அவர்களைவிட பெரிய தமிழ் அறிஞர் உண்டா என வாதிடுவர். தொல் காப்பியத்தில் 400க்கு மேற்பட்ட சமற்கிருதச் சொற்கள் உண்டென்று வையாபுரிப்பிள்ளை கூறினார். ஐயரும் தன் பங்கிற்கும் பல சொற்களைப் பட்டியலிட்டுள்ளார். அவை யெல்லாம் உண்மையில் சமற்கிருதச் சொற்கள் தாமா வென் பதை ஆய்வு செய்து பார்க்கும் போது, தமிழ்ச் சொற்களாகவே உள்ளன வென்பதை அறியலாம்.

அண்மையில் கவிதை என்ற சொல்லின் மூலம் சமற்கிரு தத்தில் உள்ளதென்று தினமணி நாளிதழில் ஒருவர் கூறியிருந் தார். கடந்த சில ஆண்டுகளுக்கு முன்பு அவை - பேரவை என்ற சொற்கள், சபா என்ற சமற்கிருதச் சொல்லின் திரிபே என ஆனந்தவிகடனில் சுஜாதா என்பவர் எழுதியிருந்தார். இக் கூற்றுகள் அனைத்தும் தமிழையும் தெரிந்திராத, சமற்கிருதத் தையும் புரிந்திராதவர்களால் சொல்லப்படுபவைகளாகும். கவிதை என்ற சொல்லை எடுத்துச் கொள்வோம்.

க என்ற வேர்ச் சொல், கவ் - கவ்வு - கவ்வுதல் என விரியும் கவ்வுதல் என்ற தமிழ்ச் சொல்லுக்குப் பிடித்தல், பற்றுதல் என்பதே பொருளாகும். ஒருபொருளை இறுக்கமாகப் பிடித்துக் கொள்ளுதல் என்க. நடுமரத்தைக் கவ்வியிருக்கும் கிளையை, கவ்வி - கவை - கவி எனலாம். கவையாகிக் கொம்பாகிக் காட்டாகத்தே நிற்கும் என்ற பாடலை ஒப்பு நோக்குக. குரங்குக் குட்டி, தன்தாயின் உடலைக் கவ்வியவாறே செல்கிறது. குரங்கு ஒரு பொருளை கவ்விக் கொள்ளும் தன்மையுடையது. அது கவையைப் பிடித்து அல்லது கவ்விக் கவையைப் பிடித்திருப்பதாலும், கவ்வித் தாவுவதாலும் குரங்கு கவி எனப்பட்டது. கவி - கபி என்று சமற்கிருதத்தில் திரிந்தது. கபி என்ற சமற்கிருதச் சொல்லுக்கான மூலச் சொல் அம்மொழியில் இல்லை.

கபிஸ்தலம் - இது தஞ்சை மாவட்டத்திலுள்ள ஊர். இது குரங்குகளின் கூட்டம் பெருமளவில் அறியப்பட்டது பற்றிச் சொல்லப்பட்டது. கபிஸ்தலம் முதல் ஆடுதுறைவரை ஒரு காலத்தில் குரங்குகள் நிறைந்திருந்தன போலும். குரங்காடு துறையைச் சுருக்கி ஆடுதுறை என்றனர்.

தலம் - தளம் ஆகிய இரண்டு சொற்களும் தமிழ் சொற் களே. ஆனால் இவ்விரண்டு சொற்களுக்கான வேர்ச் சொற்கள் வெவ்வேறானவை.

தல் - தல - தலை = முதன்மையான; தலை - தலம் = முதன்மையான இடம்.

தள் - தள்ளு - தள்ள - தளம் = நீண்டு செல்லும், விரிந்திருக்கும் பகுதி. இறைத்தலம்= கடவுள் வாழும் முதன்மையான இடம்.

தவசத்தளம் = நெல் முதலியவற்றை உலர வைக்கும் இடம்.

கவித்தலம் = குரங்குகளின் தலைமையிடம்; கவித்தலம் - கபிஸ்தலமாயிற்று.

புலவன் ஒரு பொருளைப் பற்றி அல்லது பிடிப்பதும் கவி எனப்படும். எந்தப் பாடலும் ஒரு பொருளைப் பற்றிப் பாடப்படுவதே. கவிஞன் தன் பாடலில் பல பொருளையும் பற்றுவான். பற்றிய அல்லது கவ்விய பொருளை வரிசைப்படி இணைப்பான். புலவன் கவ்வியது கவி எனப்படும்.

தைக்கப்படும் அல்லது கோர்க்கப்படும் கவி, கவி + தை - கவிதை எனப்படும். கவிதை என்ற சொல்லில் இரண்டு சொற்கள் உள்ளன.

கவிதை என்ற தமிழ்ச் சொல், கவிதா என சமற்கிருதத்தில் திரிந்தது. இதுவே மூலச் சொல்லெனக் கருதியவர்கள், கவிதை சமற்கிருதச் சொல்லே என்றனர். கவிதையில், கவ்வு + தை என்ற இரு வினைச் சொற்கள் உள்ளதை நோக்குக.

கடந்த 300 ஆண்டுகளுக்கு முன்னர்தாம், உலக மொழி களைப் பற்றிய சிந்தனை மொழி சார்ந்த அறிஞர்களுக்கு ஏற்பட்டது. இந்தச் சிந்தனையாளர்கள் அனைவரும் மேற் கித்திய கிறித்துவர்களாயிருந்தனர். எனவே, மொழி பற்றிய ஆய்வுகளுக்கு விவிலியத்தையே மேற்கோளாகக் கொண்டனர். நோவா என்பானுடைய மரபினர் பேசிய மொழிகளாக செமிட்டிக், ஆமெட்டிக், இந்திய - ஐரோப்பியம் ஆகிய மொழிக்குடும்பங்களைப் பிரித்தனர். இப்பிரிவில் சமற்கித மொழியை, இந்திய - ஐரோப்பியக் குடும்பத்தில் இணைத்து, அதற்குக் கீழை ஆரியம் எனவும் பெயரிட்டனர். இம்மூன்று மொழிக் குடும்பத்திற்கும் முதல்மொழி ஒன்று இருந்ததாகவும், அதுவே உலகின் முதன்மொழியென்றும் கூறினர். ஆனாலும் அம்மொழி எதுவென அவர்களால் கூற இயலவில்லை. எனவே அம்மொழியை முதன்மொழி (Proto - language) என்று குறித்தனர். தமிழ்மொழி பற்றிய சிந்தனை அவர்களுக்கு இல்லையாதலால், தமிழை மேற்கண்ட மொழிக்குடும்பத் துடன் இணைக்கவில்லை. தொடர்ந்து பல்வேறு காலங்களில், பலரும் புதுப்புது மொழிக் கொள்கைகளை வெளியிட்டனர்.

சமற்கிருதத்துக்கும் முந்திய மொழி இந்தியாவில் பேசப்பட்டது என்ற உண்மை அப்போது அவர்களுக்குத் தெரிந்திருக்க வில்லை. ஐரோப்பியர் வகுத்த மொழிக் கொள்கையின் முதன் மொழி தமிழே என்பதை, மேற்கண்ட மொழிக் குடும்பத்தின் உறுப்பு மொழிகளைக் கொண்டே நிறுவியுள்ளோம்.

மேற்கண்ட மொழிக் குடும்ப உறுப்புமொழிகளில் கிரேக்கம், சமற்கிருதம் தவிர்த்த பிற மொழிகள் கி.மு. 2000 ஆண்டுகளுக்கு முற்பட்டவைகளாகும். கிரேக்கம் செமிட்டிக் மொழிகளைத் தழுவியும், சமற்கிருதம் தமிழை மூலமாகக் கொண்டும் கி.மு. 1500 - 1000 ஆண்டுகளில் உருவான மொழி களாகும். சமற்கிருதம் மேற்கண்ட மொழிகளில் இளைய மொழி என்றும் கூறலாம் சமற்கிருதமே இந்தியாவின் முதன் மொழி என்ற கொள்கை, சிந்துவெளி அகழ்வாய்வுகளுக்குப் பிறகு அடிபட்டுப் போயிற்று. எனவே, கடந்த நூற்றாண்டு களில், மேலை நாட்டார் அறிவித்த மொழிக் கொள்கைகள் அனைத்தும், மொழி வரலாற்றின் இடையில் புகுத்து தொகுக்கப்பட்டதால், அக்கொள்கைகள் உண்மைத் தன்மை களை வெளிப்படுத்தவில்லை.

செமிட்டிக், ஆமெட்டிக், இந்திய ஐரோப்பிய மொழிக் குடும்ப உறுப்பு மொழிகளிலேயே ஏராளமான தமிழ்ச் சொற்கள் பொதிந்து கிடப்பதை ஆசிரியரின் பல்வேறு நூல் களின் வாயிலாக அறியலாம். இன்றைய ஆய்வுகள் உலகின் முதன் மொழி தமிழே என்ற இலக்கைத் தொட்டு நிற்கின்றது. சமற்கிருத மொழி பற்றிய வரலாறு தோண்டியெடுக்கப் பட்டுள்ளது. சமற்கிருதம் தன்னிலே தோன்றிய தனி மொழி என்ற கருத்தும் கேள்விக் குறியாகியுள்ளது. மேற்கண்ட மொழி களில் காணப்படும் தமிழ்ச் சொற்களில் பல இன்றைக்கு 4000 ஆண்டுகளுக்கு முன்பு வழக்கில் இருந்தவைகளாகும். ஒவ்வொரு ஆயிரம் ஆண்டுகளிலும், ஏராளமான தமிழ்ச் சொற்கள் வழக்கிழந்து வந்துள்ளதை தமிழ் இலக்கியங்களே தெளிவு படுத்துகின்றன. தொல்காப்பியர் காலத்திய பல சொற்கள், கடைக்கழகக் காலத்தில் வழக்கில் இல்லாமலும், கடைக் கழகச் சொற்கள், தற்போது வழக்கிழந்தும் உள்ள நிலைமை களைக் காணலாம். எனவே, வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட மொழிகளில் காணப்படும் தமிழ்ச் சொற்களை அடையாளம் காண்பதில் இடர்ப்பாடுகள் தோன்றுகின்றன. தற்காலத்திய

ஆய்வாளர்களில் சிலர், அவ்வாறான சொற்களை தமிழ் இலக்கியங்களில் காட்டுமாறு அறிவுறுத்துகின்றனர். இந்தக் கண்ணோட்டம் சரியானதன்று என்பது மட்டுமல்லாமல், தமிழ்ச் சொற்களின் நிலைப்பாடுகளையும் மறைத்துவிடும் எனலாம்.

எனவே வேற்று மொழிகளில் காணப்படும் தமிழ்ச் சொல்லை அல்லது தமிழ்ச் திரிபுச் சொல்லை, தமிழின் வேர்ச் சொல் அறியும் பாவாணரின் சூத்திரத்தைப் பயன்படுத்தி இனம் காண்பதே சரியான அணுகு முறையாகும். தமிழ்ச் சொற்கள் அனைத்தும் பாவாணரின் சூத்திரத்தால் அறியப்படும். பாவாணரின் முறையை அறிந்து பின்பற்றாதவர்களால், பிறமொழிகளில் காணப்படும் தமிழ்த் திரிவுகளைக் காண இயலாது. வேற்றுமொழியில் அறியப்படும் பல சொற்கள் தொல்காப்பியத்திலும், கடைக் கழக இக்கியங்களிலும், தற்கால வழக்கிலும் கூட உள்ளன. பல வழக்கிழந்து போயுள்ளன. நகர் என்ற தமிழ்ச் சொல், செமிட்டிக் மொழிகளில் ஆற்றைக் குறித்துப் பயன்படுத்தப் பட்டுள்ளது. ஆனால் தமிழில் அவ்வாறான பொருள் வழக்கில் இல்லை. சிந்து ஆற்றை ஓடு என்று எபிறேய மொழி கூறுகிறது. ஓடு என்ற சொல் ஆற்றைக் குறிக்கும் தமிழ் வழக்கில் இல்லை. ஆனாலும் அவை தமிழ்ப் பொருளையே கொண்டு, தமிழ்ச் சொற்களாகவே உள்ளன. தமிழ் இலக்கியங்கள் நகர், ஓடு என்ற சொற்களைப் பயன்படுத்தவில்லையென்பதால் அவை வேற்றுமொழிச் சொற்களாகி விட்டன.

உலக மொழிகளை ஆய்வு செய்து, அவைகளைத் தமிழோடு இணைத்துப் பார்க்க, வேர்ச் சொல் ஆய்வு மட்டுமே சரியான அளவு கோலாக இருக்க முடியும். ஈஸ்வர் என்ற சமற்கிருதச் சொல்லுக்கான வேர்ச்சொல், ஈ என்ற தமிழ்வேராகும். ஈ என்ற ஓரெழுத்துச் சொல், கொடுப்பதைக் குறிப்பது. ஈ - ஈகை - ஈதல் - ஈசன் என விரிவடைவதைக் காணலாம். ஈசன் - ஈஸ்வ எனத்திரிந்துள்ளது. எபிறேய மொழியில் ஈசா எனத்திரிந்துள்ளது. ஈஸ்வர் - ஈசா போன்ற சொற்கள் தமிழ் இலக்கியங்களில் சொல்லப்படவில்லை என்று முரண்டு பிடிக்கக் கூடாது.

இந்த அடிப்படையில், சமற்கிருதச் சொற்கள் பலவற்றிற்கு, அம்மொழியில் காணப்படும் அகரவரிசைப்படி, தமிழின்

வேர்சொல், மூலச்சொல் சூத்திரத்தைக் கொண்டு மூலமும் பொருளும் இந்நூலில் கண்றியப்பட்டுள்ளன. சமற்கிருத மொழியின் அனைத்துச் சொற்களுமே தமிழ் மூலத்தைக் கொண்டவைகளே. வழக்கிழந்து போன சொற்களால் சிலவற்றிற்குத் தமிழ் மூலம் காட்டுவதில் இடையூறுகளும் உள்ளன. தமிழில் முதன் முயற்சியாக இந்நூல் வெளி வருகிறது. ஆய்வு மாணவர்களுக்கு இந்நூல் பயன்படும் எனலாம்.

# குறிப்பு

இந்நூலில் விளக்கப்பட்டுள்ள சமற்கிருதச் சொற்கள் அனைத்தும், "A Sanskrit English Dictionary" என்ற அகர முதலியில் கொடுக்கப்பட்டுள்ள அகரவரிசைப்படி அளிக்கப் பட்டுள்ளன.

**A Sanskrit English Dictionary**

**Etymologically and Philologically Arranged with**

**Special Reference to Cognate Indo - European Languages**

by

**Sir Monier Monier - Williams, M.A., K.C.F.,**

Boden Professor of Sanskrit,

Motilal Banarsidass Publishers Private Limited, Delhi

First Edition Printed and Published by Oxford University Press, 1899

பெரும்பாலான சமற்கிருதச் சொற்கள் நேரிடையான பொருளையும், மற்றவை மறைமுகமான பொருளையும் உணர்த்தும் வகையில் உள்ளன. பெரும்பாலான சொற்களுக்கு வேர்ச் சொற்கள் காட்டப்படவில்லை. கிரேக்கம் உள்ளிட்ட ஐரோப்பிய மொழிகளோடு தொடர்புபடுத்தி சமற்கிருதச் சொற்கள் விளக்கப்பட்டுள்ளன. பல சொற்களுக்கான மூலமும் பொருளும் தெரியாத நிலையில், அவ்விடங்களில் கேள்விக் குறியை தொகுப்பாசிரியர் கொடுத்துள்ளார். ஒரு மூலச் சொல்லிலிருந்து விரியும் நூற்றுக் கணக்கான சொற்களை மோனியர் விளக்கியுள்ளார். ஒரு சொல்லிற்குக் கூட, இது தமிழ் மூலத்திலிருந்து சமற்கிருதத்துக்கு வந்தது என்ற குறிப்பு

காணப்படவில்லை. தென்னிந்திய மொழிகளை கூடுமான அளவிற்கு மோனியர் தவிர்த்திருக்கிறார்.

இந்நூலில் விளக்கப்பட்டுள்ள சொற்கள் விரிவாக எழுதப்படவில்லை என்றாலும் கூட, ஒவ்வொரு சமற்கிருதச் சொல்லுக்குமான தமிழின் வேரும் மூலமும் கொடுக்கப் பட்டுள்ளன. மேலும் விளக்கங்களைப் பெற விரும்புவோர், மேற்கண்ட அகரமுதலியைத் துணையாகக் கொண்டு அறிய முற்படலாம். இந்நூல் இவ்வகையான முயற்சியின் ஒரு தொடக்கமே. வாய்ப்புகள் கிடைக்குமானால், விரிவான தமிழ்சமற்கிருத அகராதியைத் தொகுக்கவும் இயலும்.

விளக்கக் குறிகள்

(த) = தமிழ்

(ச) = சமற்கிருதம்

(Rig) = இரிக்குவேதம்

(இ) = இலத்தீன்

(Lith) = இலித்துவேனியன்

(Arm.) = ஆர்மீனியன்

(Pers.) = பெர்சியன்

(Gr.) = ஜெர்மன்

(Goth) = கோத்தியம்

(Eng) = ஆங்கிலம்

(Manu) = மனு நூல்

(அ.வே.) = அதர்வண வேதம்.

(எ.கா.) = எடுத்துக்காட்டுகள்

**அக்னி** – **Agni** (ச)= தீ, நெருப்பு.
அழல் (த) = தீ. அழல் – அழலி – அழனி – அக்னி.
= அழனி (த) → அக்னி (ச) அக்னி குண்ட (ச).
= அழனி திசை (த) → அக்னி திசா (ச)
=அழனி நக்க தார் (த) → அக்னி நக்ஷத்ர (ச)

**அக்ர** – **Agra** (ச) = கடைப்பகுதி.
அக்கரை = அடுத்த பக்கம், அடுத்த பகுதி
=அக்கரை (த) → அக்ர (ச)

**அங்க்** – **Ank** (ச) = வளைவு.
வங்கு = வளைவு, வங்கு – அங்கு – அங்க்.
= வங்கு (த) → அங்க் (ச).

**அங்க்க** – **Anka** (ச) = வளைவான ஊசி.

**அங்கடி** – **Ankadi** (ச) வளைந்து செல்லும் காற்று.

**அங்கனா** – **Ankana** (ச) = வளைத்து வரையப்படும் எழுத்து.

**அங்காஸ்** – **Ankas** (ச) வளைவு (Rig. 4=40=4)

**அங்க** – **Anga** – உறுப்பு
= அங்கம் (த) → அங்க (ச).

**அங்காஸ்** – **Ankas** (ச) = வளைவு. அங்கி, அங்கின், அங்குர, அங்குச, அங்ய ஆகிய சொற்களும், வங்கு என்ற தமிழ்ச் சொல்லின் திரிபுகளே.

**அங்கார** – **Angara** (ச) = எரிச்சல், எரிதல்.
= காரம் (த) = எரிதல், சுடுதல்.
= அம்காரம் – அங்காரம் = அழகான அழல்.
= அங்காரன் (த) → அங்கார (ச) = செவ்வாய்.

**அங்குள** – **Angala** (ச) = குட்டையான, கட்டை விரல்.
= குள் – குள– குள்ள – குள = குட்டை.

= அம்குளம் - அங்குளம் = குட்டையான கட்டை விரல்.
= அங்குளம் (த) → அங்குள (ச) = கட்டை விரல்
=அங்குள (ச) = கட்டை விரல் அளவு, நீளம்.

**அங்குளி - Anguli** (ச) = அழகிய விரல்.
= அம்குள்ளி (த) → அங்குளி (ச)

**அங்குஷ்ட - Angushta** = கட்டை விரல்.
= அம் + குயம் = அங்குயம்
= குயம் = குட்டையான கட்டை விரல்.
= அங்குட்டம் (த) → அங்குஷ்ட (ச)

**அ** = எதிர் மறைப் பொருளைத் தருவது.
= அல் என்ற தமிழ்ச் சொல்லின் சுருக்கம்.
= கல் = நிலையானது; அகல் = நகர்வு.
= காலம் = பொழுது; அகாலம் = பொழுதற்ற, எதிர் பாராதது.
= வல் = வலிமை; அவல் = வலிமையற்ற
= கலம் - குறுகியது; அகலம் = விரிந்தது.
= குணம் = நற்பண்பு; அகுணம் = தீய பண்பு.
= கோரம் = அழகு; அகோரம் - அழகற்ற
= ஞானம் = அறிவு; அஞானம் = அறிவற்ற
= செல் = நகர்வு; அசெல் = நிலையான
= சல் = மலிவு (சல்லி); அசல் = உயர்வானது.
= சீர்வணம் = செரிமானம்; அசீர்வணம் = நஞ்சானது.
= சுதம் = தூய்மை; அசுதம் = அழுக்கு
= சூலி = தாய்மை; அசூலி = மலடி
= வலம் = வலிமை = அவலம் = வலிமையற்ற.
= சுரன் = சிவந்தவன்; அசுரன் = கருப்பன்.
அ என்ற முன்னொட்டு எதிர்மறையான பொருளைத் தருவது தமிழ் மரபையொட்டியதே. இதனை சமற்கிருதமும் கிரேக்கமும் ஏற்றுக் கொண்டன.
= Neros (கிரேக்கம்) = நீர்த்தன்மை; Aneros = கெட்டித் தன்மை
= Theos (கிரேக்கம்) = இறை ஏற்பு; Atheos = இறை மறுப்பு.

**அசக்கர - A - cakra**= சக்கரமில்லாமல். - சக்கரம் தமிழ்ச் சொல்லே.

**அகாட்சுஸ் – Acatsus**= கண்ணற்ற, குறைந்த பார்வையுள்ள.
காண் – (த) → காட்டிசு (ச)

**அசதூர – Acatura**= நான்கிற்கும் குறைந்த. சது – சதுக்கம் – சதுரம்.

**அசந்திர – Acandra** = நிலவில்லாத. செந்தரை (த) சந்திர → (ச) = தரை. (த) → த்ர (ச)

**அசித்து – Acit** = கெட்ட.
= சமற்கிருதத்தில் ஆயிரக் கணக்கான சொற்கள் மேற் கண்டவாறு உள்ளன.

**அஜா – Aja** = தலைவன், ஓட்டுனன், முதல்வன்
= அசை = தலை; நகர்த்து, இயக்கு என தமிழில் விரியும்.
அஜா = நடத்துபவன், நகர்த்துபவன், தூண்டுபவன்.
= அசை (த) → அஜா (ச)

**அஜா கவ – Ajakava** = சிவனின் அம்பு
= கவை = பிளவு பட்டது.
= அசைக் கவை (த) → அஜா கவ (ச)

**அஜனா – Ajana** = பிரம்மா.
அணன் = உயர்ந்தோன், பெரியோன்.
அசை அணன் (த) → அஜனா (ச).

**அஜனனி – Ajanani** = பிறப்பற்ற
= சினை = குழந்தை பிறப்பிற்கான மூலம்.
சினைனி = தாய்.
= அசினைனி = தாய்மைப் பேறில்லாதவள்.
= அசினை (த) → அஜனனி (ச).

**அஜெயா – Ajaya** = வெற்றியில்லாத.
= செய்= வெற்றிக்கான உழைப்பு.
= செய் (த) → ஜெய (ச).
= அசெய் (த) → அஜெய (ச)

**அஜார – Ajara**= என்றும் இளமை.
சாரை = நீண்ட, நெடிய.
சாரையோன் = நீண்ட நாள் வாழ்பவன், முதியவன்.
அசாரை (த) → அஜார (ச).

**அஜிதா – Ajita** = மங்காத, சிதையாத.

= சிதைவு = தளர்வு, இழப்பு, நெகிழ்வு.

= அசிதை (த) → அஜிதா (ச).

**அஜிர்ணா – Ajirna** = செரியாமை.

= செரிமானம் = உணவு கழிவாக மாறுதல்.

= அசெரிமானம் = செரியாமை, வயிறு உப்புதல்.

= செரி (த) → ஜீர்ண (ச).

**அஜீவ – Ajiva** = இறப்பு.

= சா = இறப்பு; சாய்வு = இறப்பு.

அசா = இறப்பின்மை, உயிர் வாழ்தல்.

சாவின்மை (த) → ஜீவன (ச)

**அஞ் – Anj** = ஐந்து பொருட்களாலான கெட்டிக் கூழ்.

அஞ்சு = ஐந்து. அஞ்சு + அணம் = அஞ்சனம்

= அஞ்சனம் (த) → அஞ்சனா (ச).

= Anjana= An ointment produced from five medicinal leaves, (பச்சிலை) or Pachoulis. (Rig. 1=32=2)

**அட்டக – Attaka** = உயரமான, செங்கல் அடுக்கு (brick layer)

= அட்டி = அடுக்கி வைக்கப்பட்ட செங்கற்கள்.

அட்டகம் (த) → அட்டக (ச)

**அனாக – Anaka** = சிறிய, குட்டையான.

நா = நீளம்; நாகம் = நீளமான பாம்பு.

அநாகம் = குட்டை, சிறிய.

நா (த) → அனா (ச).

**அனு – Anu** = அணுத்துகள்.

= அணு = நுண்ணிய பொருள்.

= அணு (த) → அனு (ச)

**அண்ட – Anda** = வட்டம், வட்டமான முட்டை, உலகம்

= அண் – அணை = வளைத்துப் பிடித்தல்

= அண்டம் (த) → அண்ட (ச).

= பெரும் அண்டம் (த) → பிரம்மாண்ட (ச).

**அதந்திர** – Atantra = நூலற்ற, இழையற்ற

= தனித்திரி = சிறு நூல், கயிறு, இழை.

= தனித்திரி (த) → தந்திரி – தந்திர (ச).

**அடி – Ati** = காலடி, நடத்தல், நகர்தல். (walking, Passing)
= அடி= அடியெடுத்து நடத்தல்.
= அடி (த) → அடி(ச).
= Ante (L), Ant (Lith.), Ti (Arm.), → Aiti ( Pers)

**அதிதி – Atithi** = நெருப்பு. (அக்னி).
= தீ = நெருப்பு (விண்மீன்)
= தீ தீ = விண்மீன்கள் (பன்மை) – தென் திசை.
= அதீதீ – வடதிசை விண்மீன்கள்.
= அதீதீ (த) → அதிதி (சம).

**அதிசய – Atisaya** = ஆற்றலை விஞ்சிய செயல் (Pre -eminent)
= செய் – செயல்; அதி = சிறப்பான (எ.கா. அதியன்)
அதிசெய் (த) → அதிசய (ச).

**ஆதிஅந்த – Atianta** = தொடக்கமும் முடிவும்.
= ஆதீ = முன்னிருந்த கடவுள், ஒளி.
= ஆதீ – ஆதி (த). அம்தீ = குளிர்ந்த ஒளி, மாலை, முடிவு.
= ஆதீ – அம்தீ (த) – ஆதி அந்த (ச).

**அதி அகம் – Ati aham** = உள்ளத்தை மீறிய (surpassing self - concious)
= அடி அகம் = உள்ளம்.
= அடியகம் (த) → அதியகம் (ச).

**அத்ர – Atra** = இவ்விடத்தில் (this Place).
= தரை = இடம், நிலம்.
= தரை (த) → அத்ர (ச).

**அத – Atha** = அதனால் (more over, rather).
= அதனால்= முற்றுப் பெறாத சொல்.
= அதனால் (த) → அத (ச) – Inceptive Particle.

**அதர் – Athar** = நெருப்புக் குழி, குழிவழியில் நெருப்பையும் குறித்தது.
தரை – சீரான நிலம்; அதரை – பள்ளம்.
= அதரை – அதர் – நிலம், பள்ளம், வழி, குழி. (த)
= அதர்வன் (ச) நெருப்புக்குழியில் தீயை வளர்க்கும் பிராமணர்
= அதர்வாணன் (த) → அதர்வன் (ச)

**அதர்வன் – Atharvan** = முனிவன், பிராமணன்.
= அதர்வாணன் (த) → அதர்வன் (ச).

**அதக்ஷா – Adaksha** = திறமையற்ற.
= தச்சன் = திறமையான தொழிலாளி.
= தச்சன் (த) → தக்ஷா (ச).
அதச்சு (த) → அதக்ஷா (ச).

**அட – Ada** = உண்ணுதல்.
அடு= வெப்பம்; அடை = சூடான அப்பம்.
அடுப்பு; அடுக்களை என விரியும்.
அட் (ச) = உண்ணுதல்.
அடு (த) → அட் (ச).

**அடட் – Adat** = உண்ணுதல் (Rig. 10:4:4)

**அடனா – Adana** = உண்ணும் செயல் (Rig. 5:9:3)

**அடனியா – Adaniya** = உண்ணப்பட்டது.
அடு = தமிழ் மூலச் சொல்
= edmi (Lith.), eda (Gr.), edo (Lat.), at (Goth), ita (Ger.)utem (Arm.) eat (Eng.)

**அடண்டியா – Adandya** = ஒறுக்கப்படாத (Manu= 8:3:35)
தண்டு = தடி; தள் – தண்டு= நீண்ட கழி.
= தண்டு = ஒறுத்தலுக்கான கம்பு.
= தண்டு (த) → தண்ட (ச) → தண்டியா (ச).

**அதட்ட – Adatta** = கொடுக்கப்படாதது, தடுக்கப்பட்டது (அ.வே. 4=4=19)

**அடட்ரயா – Adatrya** = அளிக்கப்படாத (,Rig. 5:49:3)
தடு = தமிழ் மூலச் சொல்.
= தடு (த) → தட்ட (ச) → தடவ (ச) → தட்ரயா (ச).

**அடண்ட – Adanta** = பற்களற்ற
தண்ட (ச) → தட்ட (ச) → தட்வ (ச) தட்ரயா (ச).

**அடண்ட – Adanta** = பற்களற்ற
= தண்ட (ச) – பல்; தந்தம் என்பர்.
தள் – தள்ளு – தண்டு = முளைத்தல்.

விழுந்து முளைப்பதால், பல்லும் யானைக் கொம்பும் தண்டு எனப்பட்டன.
= தண்டு (த) → தண்ட (ச) → Dental (E).

அடான – **Adana** = ஈயப்படாத, கொடுக்கப்படாத.
= தள் – தன் – தான் = உயர்வான, உரிமையான ஒன்று.
தான்= உயர்வு, சிறப்பு, பெருமை, செல்வம்.
தான் – தானம்= விரும்பி அளிக்கப்படும் செல்வம்.
= அதானம் (த) → அடான (ச).

அடார – **Adara** = மனைவியற்ற.
= தள் – தா= கொடுக்கின்ற, ஈ கின்ற, தருகின்ற.
= தா – தார்= கொடுக்கின்ற.
தார் – தாரம்= பிள்ளைகளை ஈனும் தாய், மனைவி.
தாரம் (த) → டார (ச)

அடினா – **Adina** = திண்மையற்ற.
= திண்மை= வலிமை.
= திண்மை (த) → தினா (ச).

அட்வ – **Adva** = இரண்டில்லை.
= ட்வ (ச) = இரண்டு.
= தள் – துள் – துமி = இரண்டாக்கு.
= துவி (த) → ட்வ (ச).

அட்வார் – **Advar** = வழியல்ல.
= ட்வார் (ச) – வழி, கதவு.
வார் – வாரை – வாரி – வழி.
வார் (த) → ட்வார் (ச).

அத்வைடா – **Advaita** = இரண்டில்லாதது, ஒன்று.
ட்வைடா (ச) = இரண்டு.
துவை (த) = பிரித்தல், இரண்டாக்குதல்.
துவை (த) = ஆடையிலிருந்து அழுக்கைப் பிரித்தல்.
துவை (த) → த்வைடா (ச).

அதமா – **Adhama** = உயர்வற்றது.
தா (ச) = உயர்வானது.
தான் – தாம் – தாமம் = உயர்வானது.
= தாமம் (த) → தாமா (ச).

**அதர்மா – Adharma** = முறையற்றது.
= தர்மா (ச) = சரியானது.
= தா – தரு – தருதல் = அளித்தல்.
= தருமை = ஒழுக்கம், அறம்.
= தருமை (த) → தர்மா (ச)

**அதிக – Adhika** = இணைப்பு, செழுமை, உயர்வு, மிகுதி.
= அள் – அதி = கூடுதலான; அதியமான், அதியன்.
= அதியம் = நிறைவு.
= அதியம் (த) → அதிக (ச).

**அதிகார – Adhikara** = ஆளுமை.
= கரம் (கை) = ஆளுமையின் உருவகம்.
= அதிகரம் = நீண்ட கை அல்லது முழு ஆளுமை.
= அதிகரம் (த) → அதிகார (ச).
= அள் – அடு – அடி – அதி என விரியும்.
= அதிகாலை, அதிசெய் (அதிசய), அதிநுட்பம், அதியச்சம், அதிமோகம், அதிமதுரம் ஆகியவை தமிழ்ச் சொற்களே. தமிழைப் போலவே, அதி சமற்கிருத முன்னொட்டாகியது.
= அதி – Addition என ஆங்கிலத்தில் திரிந்தது.

**அன் – An** = சமற்கிருதத்தில் எதிர் மறையான பொருளைத் தரும் முன்னொட்டு.
= அல் என்ற சொல், அ எனச் சுருங்கி எதிர்மறையானது.
= அல் – அன் – அன்று = எதிர் மறையானது.
= இரண்டன்று, இரண்டு அன்று = ஒன்று.
= அன்று (த) → அன் (ச).
அன் – ஆதி, அன் – அக்னி, அன் – அந்த, அன் – அந்தர என விரியும்.
= ஏக் = ஒன்று; அன் – ஏக், அநேக் – பல.

**அனு – Anu** = மேலும் இணைதல் அல்லது அணைதல்.
= அண் – அணை = இணைத்துக் கொள்.
= அணை (த) → அனு (ச).

**அனுக்க – Anuka** = சார்ந்தது, இணைந்தது, துணையானது.
= Anu - ka= A subordinate. dependent (Panini, 5:2:74).
= அணுக்கன் (த) = சார்ந்திருப்பவன், தொண்டன்.
= அணுக்கன் (த) → அனுக்க (ச).

**அனுகூல – Anukula** = இணக்கமான, நட்பான.
= அணை கொள் (த) = இணைத்துக் கொள்.
= அணை கொள் (த) → அனுகூல (ச).

**அன் - ஏக – Aneka** = ஒன்றல்ல, பல.
= க என்ற தமிழ்ச் சொல் எண் ஒன்றைக் குறிப்பது.
= க, ஏக என்று சமற்கிருதத்தில் திரிந்தது.
= அணை + க = ஒன்றுடன் இணைந்த பலது.
= அணைக (த) → அநேக (ச).

**அன்ட – Anda** = முடிவு, எல்லை.
= தீ = கதிரவன்; அணையும் தீ = மாலைக் கதிரவன்.
= அணைத் தீ – அண்தீ – அந்தி = பகலின் முடிவு.
=அந்தி (த) – அன்ட (ச).

**அன்டர – Antara** = நடுவே, இடையில்.
= தரையோடு இணைந்தது, Tara = இடம், தரை, வழி.
=அணை தரை (த) = தரையை அடுத்துள்ளது.
= அணை தரை (த) → அன்டர (ச).

**அந்த – Andha** = மாலைப் பொழுது, இருண்ட பொழுது, அந்தி.
= அந்தி (த) = இருட்டு, குருடு
= அந்தியன் (த) = குருடன் → அந்தக = குருடன்.

**அந்ரா – Andhra** = ஆந்திரா அல்லது தெலுங்கானப் பகுதி.
= குருட்டு மக்கள் அல்லது கீழ்ச்சாதி மக்கள்.
= People of low caste, the offspring of a Vaideha father and Karavara the low caste mother - Manu, 9:36.
= ஆந்திரா என்றால் கீழ்ச்சாதி மக்கள் வாழும் பகுதி என்பதே பொருளாகும்.

**அன்ன – Anna** = உணவு, அரிசிச் சோறு.
=அண்ணம் = வாயின் மேல்பகுதி; அணம் = உயர்வு.
= உண்ணம் = அடுப்பிலிட்ட உணவு.
= உண் – உண – உண்ணம் (த) → அன்ன (ச)

**அன்யா – Anya** = அறிமுகமில்லாதவன், மற்றவன், அயலான்.
= அணையான் = தன்னைச் சாராதவன்.
= அணையான் (த) → அன்ய (ச)

**அன்யத்ர – Anyatra** = வேற்றிடம்.
= அணையா தரை (நிலம்) → அன்யத்ர.

**அன்யாய – Anyaya** = அறத்திற்குப் புறம்பான, நேர்மையற்ற.
= நேயம் = அன்பு, பிணைப்பு.
= நேயம் (த) → நியாய (ச).

**அன்யான – Anyana** = அறத்திற்குப் புறம்பான, நேர்மையற்ற.
= நேயம் = அன்பு, பிணைப்பு.
= நேயம் (த) → நியான (ச).

**அன்யான – Anyana** = குற்றமற்ற, முழுமையான.
= உன்னுதல்= முழுமையான பார்வை.
= உன்னி (த) → நியான (ச).

**அன்வர்த்த – Anvartha** = உண்மைப் பொருளை கொள்ளுதல்.
அறிதல் (த) → அர்த்த (ச).

**அன்வ – Anva** = தொடர்தல்.
= அணி – தொடர்ச்சி.
= அணி(த) → அன்வ (ச).

**அன்வ அக்ஷ – Anva aksha** = பக்கத்தில் அல்லது பின் தொடர்தல்.
= அக்கம் (த) → அக்ஷ (ச).

**அப் – Ap** = நீர்.
= அப்பு = கடல் அல்லது நீர்
= அப்பு அணை கிடந்தோன் (திருமால்).
அப்பு (த) → அப் (ச).

**அப்ய – Apya** = நீரில் இருத்தல், நீரினின்றும் வெளியேறுதல். (Rig. 6:67:9)

**அப்திய – Aptya** = நீர்த்தன்மை (Rig. 1:124:5)

**அபா – Apa** = தொலைவில், வெளியே.
= அப்பால் (த) அபா (ச).
As a seperable particle or adverb in Vedas with ablative case= away from, on the outside of. ab (Greek), ab (Latin), af (Gothic), off (English).

**அபா காமா – Apa kama** = வெறுப்பு (Rig, 6:75:2)
= காமம் (த) = விருப்பு. அது வெளியேறினால் வெறுப்பு.
= காமம் (த) → காமா (ச)

**அபா குக்ஷி – Apa kukshi** = நோயுள்ள வயிறு, செரிமான மற்றது.
குழி = குழைவாயுள்ள வயிறு.
குழி (த) → குக்ஷி (ச).

**அபா – Apa** = எதிர் மறையான பொருளைத் தரும் முன்னொட்டு.
(A Prefix to nouns and verbs expreses away, off, back, opposed to the Sanskrit words up a, anu,sam and pra)
= அவலம் என்ற தமிழ்ச் சொல்லை நோக்குக.
= அவலம் – அவ எனச் சுருங்கி, அப எனத் திரிந்தது.
அபகரணம், அபகாரம், அபகீர்த்தி, அபாக்யவதி, அபச குணம், அபசாரம், அபரூபம், அபவாதம் போன்ற சமற் கிருதச் சொற்களை ஒப்பு நோக்குக.

**அபராஜிதா – Aparajita** = வெல்ல முடியாத மன்னன், கண்ணனின் மகன்.
= அர – அரன் – அரியன் – அரைசன் – அரசன்.
= அரசு (த) → ராச, ராஜ்ய, ராஜீய (ச).

**அபராத – Apradha** = குற்றம், தவறு, பிழை.
= அறம் = குற்றமற்ற, நேர்மையான.
= அவஅறம் (த) → அபராத(ச)

**அபவாத – Apavada** = குற்றப் பேச்சு.
= வாய்= சொல், பேச்சு, மொழியையும் குறிக்கும்.
அறம் வாய் (மொழி), அறமாய் – அறமாயிக் எனப்பட்டது.
= வாய் (த) வாய்த → வாத (ச).

**அபி (அ)பி – Api or Pi** = நெருக்கம், வளைப்பு, இணைவு.
= பை (த) = நெருக்கம், வளைவு; பைந்தொடி – வளை.
= பை (த) → பி(ச).
= Pai (Greek) → Api (Zend) → Be (English and German) Ex:become, belove, below.

**அபி – Api** = காய்ந்த, வற்றிய, உலர்ந்த.
= Api - nasa = dryness of the nose.

= அவிநாசி = வற்றிய, உலர்ந்த நாசி.
= அவி = சூடு, வெப்பம், வறட்சி.
= அவிநாசி (த) → அபிநாச (ச).

**அபூர்வ – Apurva** = முன்நிகழ்வற்ற, முன்பு அறிந்திராத.
= புர் – பூர் – பூரம் = பெருக்கம், விரிவு.
= புர் – புரி = விரிவடைந்த நகரம்.
= பூரம் = தொடர் நிகழ்வு, தொடர்ச்சி.
= அப்பூரம் (த) = முன் நிகழ்வற்ற → அபூர்வ (ச).

**அபேக்ஷ் – Apeksh** = விருப்பம், வேட்கை.
= அபேட்சர் (ச) = தேர்தலில் போட்டியிட விரும்புபவர்.
= வேட்கை (த) = விருப்பம்.
= வேட்கை (த) → பேக்ஷை → அபேக்ஷை(ச).
= வகரம் பகரமாயிற்று.

**அப்பி – Apy** = இணை, மேலும் இணை (to add more)
= அப்பு – அப்பி (த) = ஒன்றின் மீது ஒட்டிக் கொண்டிருப்பது.
= உடலில் சேற்றை அப்பிக் கொண்டான்.
= அப்பி (த) → அப்பி (ச).

**அபிரகார – Aprakara** = செம்மையாகச் செய்யாமை.
= கரம் = கை; செயலுக்குரியதாயிற்று.
= பெருங்கரம் = சிறப்பான செய்கை.
= பெருங்கரம் (த) → பிரகார (ச).

**அ, அப, அப்ர (A, Apa, Apra) என்ற எதிர்மறையான பொருளைத் தரும் சொற்கள் நூற்றுக் கணக்கில் உள்ளன.**

**அப்சரஸ் – Apsaras** = நீரிலும் மேகங்களுக்கிடையேயும் செல்கின்ற கூட்டம்.
= சாரை (த) = கூட்டம். எறும்புகள் சாரை சாரையாய் ஊர்கின்றன.
= அப்பு (த). = நீர் அல்லது கடல்.
= அப்(பு) சாரஸ் (ச) = நீரில், மேகத்தில் செல்லும் தேவப் பெண்கள்.
= கந்தர்வரின் மனைவியர். கடல் சூழலில் (whirl) ரம்பா தோன்றினாள்.

**அப்சு – Apsu** = நீரில்.
= அப்பு (த) → அப்சு (ச).
= அப்சு = பாபிலோனிய நீர்க்கடவுள்.

**அபல – Aphala** = மலடு (Rig. 10:97:15)
= பொல் (த) = புணர்தல், கருவுருதல்.
= பொல் (த) → பல (ச)

**அபந்து – Abandhu** = துணையற்ற, நட்பற்ற.
= பல்துணை – பந்துணை – பந்து (ச.).
= பல்து (த) → பந்து (ச.).

**அபகு – Abahu** = பலவன்று, சில (not many, few).
= பகு – பகுத்தல் = பலவாறாகப் பிரித்தல்.
= பகு – பகுதி = பலவற்றில் ஒன்று.
= பகு (த) → பகு (ச.).

**அபுத்தி – Abuddhi** = அறிவற்ற. (மனு, 111:226)
= புதை (த.) = மறைவு. புதை – புது = புதிய.
= புதுதீ – புத்தீ = புதிய தீ, புதிய ஒளி, புதிய அறிவு.
= புத்தீ (த.) – புத்தி (ச.).

**அபிராமன – Abrahmana** = பிராமணனுக்கு எதிரான, பிரம்மாவை அறியாத (பாணி. 6:2:173)
= அமணன் (த.) = துறவி, முனிவன்.
= பெரும் அமணன் = பெருந்துறவி, மூப்புடை முனிவன்.
= பெரும் அமணன் (த) → பிராமண (ச.).
= பெரும் ஆள் (த) → பிரம்மா (ச.).

**அபக்தா – Abakta** = துண்டிக்கப்பட்ட, பற்றற்ற. (Rig, 1:129:5)
= பற்று (த) = இணைப்பு.
= பற்று (த) → பக்த (ச.)

**அபய – Abhaya** = அச்சமற்ற, பாதுகாப்பான.
= பேய் (த) = அச்சம் தரு உரு.
= பேய் – பேயம் – பயம் (ச.).
= பேய் (த) → பய (ச.).

**அபாவ – Abhava** = நடைமுறையில் இல்லாதது.
= பாவி – பாவித்தல் = நடைமுறையில் உள்ள வழக்கு.
= பாவி (த) → பாவ (ச.)

**அமங்கல – Amangala** = தீய, நற்கூறற்ற.
= மண்கலம் = நற்கூற்றை விளக்கும் மண்பானை.
= மண்கலம் – மங்கலம் (மஞ்சள், மாவிலை கொண்ட நீர்க்கலம்)
= மங்கலம் – நற்கூற்றின் அடையாளம்.
= மங்கலம் (த) → மங்கள (ச.).

**அமேதாஸ் – Amedas** = அறிவிலி (பாணினி, 5:4:122)
= மீ – மே – மேல் – மேடு – மேடை – மேதை = அறிவன்.
= மேதை (த) – மேதாஸ் (ச).

**அமெனா – Amena** = மனைவியற்றவன். (Rig. 5:31:2)
= மனை – மனைவி.
= மனை (த) → மெனா (ச).

**அமோக்ஷ – Amoksha** = மீட்பின்மை (unliberated)
= மீள் – மீட்பு – மீட்கை = விடுதலை.
= மீட்கை (த) → மோட் கை → மோக்ஷ (ச).

**அமோட – Amota** = நெய்யப்பட்ட துணி
= மடி = துணி; மடிசார் = சேலை.
= மடி (த) → மோட (ச).

**அம்பா – Amba** = தாய்.
= அம்மா (த) → அம்பா (ச).
= Amme (Ger), Amma (Old Ger.).

**அம்பார – Ambara** = விரிந்த, பரந்த.
= பர = பரந்த. அம் = விரிந்த கடல், மேகம்.
= அம்பர (த) → அம்பார (ச). → Emporium (E)

**அம்பிகா – Ambika** = தாய், நல்ல பெண் (பாணினி, 7:3:107)
= அம்மா என்ற சொல்லின் திரிபு.
= அம்பயா (ச), அம்பாலி (ச), அம்பி (ச) என விரியும்.

**அம்பிகேய – Ambikeya** = முருகன், தாயின் மகன்.
= அம்மாவின் சேயன். சேயன் (த) → சேய (ச).
= அம்மா சேய் (த) → அம்பி கேய (ச).

**அம்பு – Ambu** = நீர்.
= அம் = நீர்.
= அம் (த) → அம்பு (ச).

**அமுக – Amuka** = பெயரில்லாத, அடையாளமற்ற.
= முக – முகம் = ஒருவனை அடையாளம் காணும் உறுப்பு.
= முகம் – முகவரி = இருப்பிட விளக்கம்.
= முக (த) → முக (ச).

**அமுக்த – Amukta** = முற்றுப் பெறாத (not liberated from birth and death).
= முற்று – முற்றி = முழுமை.
= முற்றி (த) → முக்த (ச).

**அமூல – Amula** = வேரில்லாத, அடிப்படையில்லாத (rootless).
= முள் – முல் – மூல் – மூலம் = தோற்றம் (base).
= மூலம் (த) → மூல (ச.).
= அமூல்ய (ச) = தகுதியற்ற, விலையற்ற.

**அம்ரித – Amrita** = இறப்பற்ற – to be (பாணினி, 6:2:116)
= மல் – மள் – மர் – மரி = கேடு, அழிவு, சாவு.
= மரி (த) → ம்ரி (ச).
= மரித்தல் (த) → ம்ரித்த (ச).

**அயாம – Ayama** = பகலில் (during day)
= யாமம் = இரவு.
= யாமம் (த) → யாம (ச).

**அயுத்க்தா – Ayukta** = இணைப்பற்ற.
= உத்தி = இணைப்பு. விளையாட்டில் குழுவாக இணைதல்.
= உத்தி (த) → உக்தா, யுக்தா (ச).

**அயோக – Ayoga** = பிரிவு, விலக்கு.
= ஒக்கம் – ஒக்கம் – ஓகம் = உடலோம்பும் கலை.
= ஒக்கம் = இணைப்பு, சேர்ப்பு.
= ஒக்கம் – ஓகம் (த) – யோகா (ச).

**அயோக்ய – Ayogya** = பயனற்ற, தகுதியற்ற.
= ஒக்கம் – ஓகம் = உடற்தகுதிக்கான கலை.
= ஒக்கையன் = தகுதிபெற்றவன்.
= ஒக்கை (த) → யோக்ய (ச).

**அயோனி – Ayoni** = மூலமில்லாத, பிறப்பில்லாத (கடவுள்)
= (any place other than the pudendam mulibere)
= யா = முதிய, வாழ்ந்து கொண்டிருக்கின்ற (to be)

= ஆ + யா = ஆயா, முதியவள். (ஆயா என்ற எபிறேயச் சொல்லின் வேர் யா என்பதாகும்.)
= யா (த) → யோ (ச.).

**அர – Ara** = மையப்புள்ளியிலிருந்து நீளும் கோடு, ஆரம்.
= ஆர் – ஆர – ஆரம் = நீண்ட.
= ஆரம் (த) → அர (ச).

**அரது – Aradu** = சொல்லும் தன்மையுள்ள (colosanthes Indica)
= அரளி (த) → அரது (ச).

**அரணா – Arana** = பாதுகாப்பான, நீண்டு செல்கின்ற.
= அரண் = (மதிற் சுவரால்) பாதுகாக்கப்பட்ட இடம்.
= அரண் (த) → அரணா (ச)

**அரண்யா – Aranya** = நீண்ட, நெடிய (காடு, பாலைவனம்)
= யா அரண் = நீண்டு செல்லும் காடு.
= யாஅரண் (த) → அரண்யா (ச.)

**அரண்யக – Aranyaka** = காடு.
= அரண் + அகம் = அரணகம்.
= அரணகம் (த) → அரண்யக (ச)

**அரதா – Aratha** = ஊர்தியற்ற.
= ஊர் = ஊர்த்து = நகர்வு
= ஊர்தி = வண்டி.
= ஊர்தி (த) → ரத்தி – ரத (ச).

**அரம் – Aram** = சமயச் சடங்கு
= அறம் (த) → அரம் (ச.).

**அரரு – Araru** = அரன் அல்லாத, அசுரன்.
= அரன் = தெய்வத்தன்மையுள்ள
= அ + அரன் = தெய்வத்தன்மையற்ற
= அரன் (த) → அர (ச)

**அரச – Arasa** = சுவையற்ற
= அரை + சுவை = அரைத்துச் சுவை பெறும் உணவு (குழம்பு, கூட்டு)
= அரைச் சுவை = உணவுச்சுவை.
= அரைத்து செய்தல், செய் (த) → ர செய் → ரச (ச)

**அராஜக – Arajaka** = தலைவனில்லாத (ஒழுங்கற்ற) அரசு.
= அர – அரச – அரசன் = ஒறுக்கும் ஆளுமை கொண்டவன்.
= அர (த) → ராச – ராஜ (ச)
=அரசன் (த) → ராஜன் (ச)

**அரி – Ari** = முனிவன் (Rig., 1:186:3)
= அரி = அனைத்தையும் அரிந்தவன், துறந்தவன், முனிவன்.
= அரி = துறை, நீக்கு, அழி.
= அரி (த) → அரி (ச)

**அரிஷ்ட – Arishta** = அரி என்ற வினையில் விரிந்த சொல்.
= வெட்டுக் காயத்துக்கான மருந்து.
அழுக்கை அரியும் அரப்பு மரம் (Soap berry)
= நோயை அழிக்கும் பூண்டு
ஊழ்வினை (மகாபாரதம், 7:6573)
இறப்பின் அறிகுறி (மேலதே, 6:2126)
= மேற்கண்ட அனைத்தும் சமற்கிருத விளக்கங்களாகும்.

**அரு – Aru** = ஞாயிறு.
அரி – அரி = இருளை அரிகின்ற.
அரு – அருகன் = கதிரவன்.
அரு (த) → அரு (ச)

**அருண – Aruna** = சிவப்பு, கதிரவன் (Rig. 9:61:4)
= அருவண்ணன் – அருவணன் – அருணன் = கதிரவன்
= அருணன் (த) → அருண (ச)

**அரூப – Arupa** = உருவமற்ற. (formless, shapeless)
உரு = வடிவம், தோற்றம்
அருவுரு = வடிவமற்ற
= உரு (த) → ரூப (ச)

**அரோக – Aroka** = ஒளியற்ற, இருண்ட
= அரத்தம் = சிவப்பு, ஒளி; அரக்கம் = கருமை , இருள்
= அரக்க (த) → ரோக (ச)

**அரோக – Aroga** = ஓக விடல், ஓம்பிய நலம்.
= ஓகம் (த) → அரோகம் (ச) – அர் + ஓகம்
ஓகம் (த) → ஓக (ச)
= ஆர் ஓகம் = நல்ல உடல் நலம்
ஆரோகம் (த) → ஆரோக்ய – Arogya (ச)

**அர்க்க – Arka** = கதிர், ஒளி, ஞாயிறு (Rig. 9:50:4)
= கற்றவன் (Rig. 8:63:6)
=உணவு, மேலதே, (7:9:2)
=அர் – ஆர் (த) = உயர்வு, பெருமை, சிவந்த என விரியும்.
= அருகன் (த) → அர்க்க (ச)

**அர்க்கநாஸ் – Arkanas** = தெய்வீக நுகர்வைக் கொண்ட மூக்கு
=நாசி = மூக்கு
=நாசி (த) → நாஸ் (ச) Nose (ஆங்கிலம்)

**அர்ஜூனா – Arjuna**= ஒளிரும் வெண்மை
=வெள்ளை (Rig. 6:9:1)
=ஒருவனின் பெயர் (Rig. 1:122:5) என விரியும்
=சுள் – சுண் – சுண்ணம் = வெண்மை
= சுண் (த) → ஜூனா (ச)

**அரன – Arana** = ஓடை (stream)
= போர்க்காலத் தடுப்புத் சுவர் (Rig. 5:50:4)
=அரி என்ற தமிழ் மூலத்திரிபுகள்.
=மண்ணை அரித்துக் கொண்டு செல்லும் ஓடை = அரி
=கொல்லுதலிலிருந்து (அரியல்) பாதுகாப்பான அரண்
= அரி – அரண் (த) → அரன (ச)

**அர்த்த – Ardha** = துண்டிக்கப்பட்ட சிறு பகுதி
= அரிதல் = அர்த (ச)
அர்ப்ப – Arbha = சிறப்பற்ற, சிறிய (பாணினி, 1:1:33)

**அர்ப்ப – Arbha** (அ) அல்ப – Alpa = சிறப்பற்ற, சிறிய. (பாணினி, 1:1:33)
= அல் – அல்கு = குறைவு, சுருக்கம்
= அல் + பூ = அற்பூ = சிறிய பூ
= அற்ப (த) → அர்ப (ச).

**அர்ய – Arya** = தலைவன், முதல்வன் – lord or master (பாணினி, 111:1:103)
= ஆர் – ஆரியன் = உயர்ந்தோன், பெரியோன்
= ஆரியன் (த) → அர்ய (ச)

**அல – Ala** = தேளின் கொடுக்கு
=அலகு = மூக்கு அல்லது கொடுக்கு
= அல் – அல – ஆல் – ஆலம் = நஞ்சு
= அலகு (த) → அல (ச)

**அலக – Alaka** = வெறி நாய்
= அலை – அலைதல் = நோக்கமின்றி சுற்றுதல்
= அல – அலகை = பேய் (இரவில் சுற்றுவதாக நம்பிக்கை)
= அலகை = நாய். அலகை (த) → அலக (ச)

**அலகம் – Alakam** = ஒன்றுமில்லாமை (Rig. 9:71:6)
= அல் அகம் = ஒன்றுமில்லாத வீடு, இடம், பகுதி
= அல்லகம் (த) → அலக (ச)

**அலக்ஷிய – Alakshya** = இலக்கற்ற (unmarked)
= இலக்கு = குறி, அடையாளம்
= இலக்கு (த) – லக்ஷிய (ச)

**அலகு – A - laghu** = சுமையான, நீளமான
= இல் – இல = இல்லாத, குறைந்த
= இல – இலகு = சுமையற்ற, தூக்க முடிந்த
= இலகு (த) → லகு (ச)

**அலம் – Alam** = அணி செய்தல் (decoration)
= அள் + அம் = அளம்
= அளம் = அழகிய பொருட்களை இணைத்தல்
= அளம் (த) → அலம் (ச)
= அளம்காரன் (த) → (Alamkar – அலம்கார (ச)

**அலோக – Aloka** = உலக முடிவு, இல்லா உலகம்
= உல் – உலக – உலகு – உலகம் = சுற்றிவரும் நம்கோள்
= உலகு (த) → லோக (ச)

**அவ் – Av** = படைத்தல் (to offer) – (Rig. 1:166:13)
= அவி = சூடுபடுத்து, வெப்பமூட்டு, சமைத்த உணவு
= அவி (த) → அவ் (ச)

**அவகுண – Avaguna** = நல்லெண்ணமின்மை
= அ + வலம் = அவலம் = ஒழுக்கமில்லாத.
= அவலம் (த) → அவ (ச.)
= குணம் (த) → குண (ச.)
= அவலக்குணம் (த) → அவகுண (ச.)

**அவகுஹ் – Avakuh** = ஒளிப்பு, மறைப்பு.
= குள் – குக்கை – குகை = ஒழுங்கை.
= குகை (த) → குஹ் (ச).

**அவசன – Avacana** = சொல்லாத, பேசாத.
= சொல், சொன் எனவும் அறியப்படும்.
= வாய்ச் சொல் – சொன் = பேச்சு.
= வாய்ச்சொன் (த) – வாய்ச்சொன்ன → வசன (ச).

**அவகூறி – Avacuri** = சிறு குறிப்பு அல்லது பேச்சு.
= குள் – குறு – குறி = அடையாளம், எழுத்து, சொல்.
= குறி – கூறி (னான்).
= கூறி (த) → கூறி (ச.).

**அவச் சின்ன – Avacchinna** = பிரிக்கப்பட்ட, துண்டிக்கப்பட்ட.
= சின்ன = சிறிய, பிரிக்கப்பட்ட.
= சின்ன (த) → ச்சின்ன (ச.).

**அவதிட்ட – Avatita** = கூர்மையான மூக்கு (பாணினி, 5:2:31)
= தட்டை = கூர்மையற்ற (Flat)
= தட்டை (த) → திட்ட (ச.).

**அவதார – Avathara** = தொடர்ந்த பிறப்பு.
= தார் = நீண்ட, தொடர்ந்த. தார்க்குச்சி.
= தரு – தார் = பிறப்பைத் தரும் கடவுள்.
= தார் (த) → தார (ச).

**அவதோக – Avatoka** = பெண் அல்லது பசு.
= தோகை = நீண்ட மயிர்க்கற்றையையுடைய பெண்ணுக்கான உருவகம்.
= தோகை (த) → தோகா (ச.)

**அவாதத்** – Avadat = பேசாத.
= வாதம் (ச) = பேச்சு.
= வாய் (த) = பேச்சு.
= வாய்தா (ச) = மறுமுறை வரச்சொல்லுதல்.
= வாய் (த) → வாய்தா (ச) → வாதம் – வாத (ச).

**அவதாப்** – Avadhav = கீழ் ஓட்டம் – to run down (Rig. 1:162:11)
= தாவு = தாண்டிக் குதி, ஓடு.
= தாவு (த) – தாப் (ச)

**அவநி** – Avani = ஆறு, ஓடை
= வான் நீர் = மழை
= வான் நீர் (த) – வாநி (ச.)

**அவனி – Avani** = வளைவான முகடுகளைக் கொண்ட மலை.
= வண் – வண்ணுதல் = வளைதல்.
= வண்ணி (த) = வளைவு.
= வணி (த) → வனி (ச.)

**அவந்தி – Avanti** = மக்களும் நாடும் (மகாபாரதம், 6:330)
= வா – வரும் – வந்த (மக்கள்) – குடியேறிய மக்கள்.
= வந்தவர் (த) → வந்தி (ச.)

**அவபான – Avapana** = நீர் அருந்துதல் (Rig. 1:136:4)
= வான்நீர் (த) → பானி – பான (ச.).

**அவர்ண – Avarna** = வண்ணமில்லாத (மகாபாரதம், 111:.8384)
= வண்ணம் (த) → வர்ண (ச.)

**அசநாய – Asanaya** = உண்ண விரும்புதல் (பாணினி, 7:4:34)
= ஆசை = விருப்பம்.
= ஆசை (த) → அச (ச.)

**அசுத்த – Asuddha** = தூய்மையற்ற.
= சுள் – சுத் – சுதை = வெண்மை.
+ சுதை (த) → சுத் (ச.).

**அசுஷ்க – Asushka** = உலராத, சுருக்கமில்லாத.
= சுள் – சுரு – சுருக்க – சுக்க – சுக்கு = சுருங்கிய இஞ்சி.
= சுக்கம் (த) → சுஷ்க (ச).

**அசூத்ர – Asudra** = சூத்திரனல்லாத.
= சூத்திரன் = தமிழன் (கில்காமேஷ் கதை, பாபிலோன்)
= சூத்திரன் (த) → சூத்ர (ச).

**அசூன்ய – Asunya** = நிறைவு (not empty).
= சுன்னம் = வளைவு, வட்டம், வானம்.
= சுன்னம் (த) → சூன்ய (ச.).

**அசோக – Asoka** = சோர்வற்ற, மகிழ்வான.
= சூள் – சூர் – சோர் –சோர்வு = களைப்பு, இடறல்.
= சோர்வு – சோகு (த) → சோக (க).

**அஸ்மன் – Asman** = அசையாத மண், கல், பாறை.
= மண் = பாறையின் துகள்.
= அசையாமண் (த) → அஸ்மன் (ச).

**அஸ்சிரம – Asrama** = இடையூறற்ற (Rig. 7:69:7)
= சிறு – சிறுமம் = சிறிய இடையூறு.
= சிறுமம் (த) → ஸ்ரம (ச.)

**அஸ்ரி – Asri** = சீர்மையற்ற.
= சீர் = நற்கூறு, நன்மை, நலம்.
= சீர் (த) – ஸ்ரி (ச).

**அஸ்ருதி – Asruti** = சுருக்கம்.
= சுரு – சுருக்கம் = நீண்ட விளக்கத்தை சுருக்கி எழுதுவது.
= சுருக்கம் (த) → சுருத்தி → ஸ்ருதி (ச).

**அஸ்வ – Asua** = புரவி. புரவியென்பது நேரிடையான பொருளன்று.
= சே என்ற சொல் எண் ஆறையும், சா என்பது எண் ஏழையும் குறித்த பழந்தமிழ்ச் சொற்களாகும்.
= சா (த) → ஸ்வ (ச).
= கதிரவனின் ஏழு வண்ணங்களும் (கதிர்களும்) ஏழு புரவிகளாகக் கருதப்பட்டு, ஸ்வ என்பது புரவியைக் குறித்தது.
= ஸ்வ, அஸ்வின், ஆகிய சொற்கள் புரவியைக் குறிப்பன.

**அகம் – Aham** = முதன்மை, முதலில்.
= க = தமிழின் முதல் உயிர்மெய், முதல் எண் ஒன்று.
= அகரம் = அ என்ற முதல் எழுத்து.
= அ + க நிறைந்து முதன்மையைக் குறிக்க, அகம் (ச) என்றானது.

**அகர் – Ahar** = இரவும் பகலும்.
= அல் = இரவு; பகல் = ஒளி.
= பகல் – பகர் எனப்பட்டது; ஈற்றுப் போலி.
= அல் + பகர் = அற்பகர் (த) → அகர் (ச).

**ஆ – A** = தமிழைப் போலவே இரண்டாவது உயிரெழுத்து.
= ஆ (த) = வலி, இன்னல், இடுக்கண் காலத்தில் ஒலி.
= ஆ (ச) = இரக்க ஒலி, வலிக்கால ஒலி.

= ஆ (த) = தொடக்கம், தொடக்கமாகிய கடவுள், சிவன்.
= ஆ (ச) = சிவா.
= ஆ (த) = வியப்புக்குரிய, ஒலி.
= ஆ (ச) = முழுமை, உண்மை (வியப்பொலி)
= ஆ (ச) = கூடுதலாக (intensified).

**ஆகபில – Akapila** = கடும் பழுப்பு.
= கப்பி (த) – கபில் (ச).
= ஆகபில (ச) = கடும் பழுப்பு, கரும் பழுப்பு (கூடுதல்).

**ஆகரண – Akarana** = கூர்ந்து கேட்டல், நீண்டகாது என்பது பொதுப்பொருள்.
= கரம் = நீண்ட.
= கரம் (த) → கரணம் (ச).
= ஆகரணம் (ச) = கதை கேட்டல், கூர்ந்து கேட்டல்.

**ஆகல்ப – Akalpa** = அழகுபடுத்துதல்.
= கலை = அழகு.
= கலை (த) → கல்ப (ச).
= ஆகல்ப (ச) = மேலும் அழகுபடுத்துதல்.

**ஆகாச – Akasa** = ஆகாயம், திறந்தவெளி.
= காயம் = அண்டவெளி. ஆ = தொடக்கம்.
= ஆகாயம் = எல்லாம் தோன்றுமுன் இருந்த வெளி.
= ஆகாயம் (த) → ஆகாச (ச)

**ஆகுஞ்சன – Akuncana** = வளைவு.
= குஞ்சு – குஞ்சி = நிமிராத குழந்தை, பறவையின் குஞ்சு.
= குஞ்சு (த) = குஞ்சன (ச).
= ஆகுஞ்சன (ச) = ஒடுங்கிய வளைவு.

**ஆகூல – Akula** = குழப்பம்.
= குழை = நெகிழ்தல், மாறுதல், திரிதல்.
= குழை (த) → கூல (ச).
= ஆகூல (ச) = குழப்பம் (confounded).

**ஆகர்ஷ – Akarsh** = இழுத்தல், ஈர்த்தல்.
= கரம் = பற்றியிழுக்கும் உறுப்பு.
= கரத்தல் = இழுத்தல்.
= கர (த) = கர்ஷ (ச).
= ஆகர்ஷ = புவியீர்ப்பு, இழுப்பு.

**ஆகர - Akara** = மிகதியாகக் கொடுத்தல்.
= கரம் = கொடுக்கும் உறுப்பு.
= கரம் (த) → கர (ச).
= ஆகர (ச) = மிகுதியாகக் கொடுத்தல்.
= Distributes abundantly. (Rig. 3:51:3)

**ஆகரிக - Akarika** = சுரங்கத் தொழிலாளி (miner).
= கரக்கை = நீண்ட கை அல்லது நீண்ட வழியை ஏற்படுத்துதல்.
= கரக்கை (த) → கரிக (ச).
= ஆகரிக (ச) = சுரங்கம் தோண்டும் பணியாளன். (பாணினி, 4:4:69)

**ஆக்கவ்சாலா** - திறமைகளை வளர்க்க விரும்புதல் (பள்ளி)
= ஆக்கம் = பெருக்கம், வளர்ச்சி.
= ஆக்க சாலை (த) → ஆக்கவ்சாலா (ச).

**ஆகோப - Akopa** = சினம், சினக்குறி.
= கொவ்வை = சிவந்தபழம், சினத்தின் உருவகம்.
= கொவ்வம் = சினம்.
= கொவ்வம் (த) = கோப (க).

**ஆகிராந்த் - Akrand** = கத்துதல்.
= கரை = ஒலித்தல் (காக்கை)
= கரைதல் (த) → கிராந்த் (ச).
= ஆகிராந்த் (ச) = மிகு ஒலி (மகா.பார. 3:114:61)
= ஆகிரந்த (ச) = வாய்விட்டு அழுதல் (மனு, 8:292)

**ஆகரம் - Akram** = கைகளை வீசி விரைந்து நடத்தல்.
= கரம் = கை.
= கரம் (த) → கரம் (ச).
= ஆகரம் (க) = விரைவாக நடத்தல், நெருங்குதல் (Rig, 3:4:5).

**ஆக்ரோச - Akrosa** = திட்டுதல், வைதல்.
= குறைசொல் = தவறான சொல் அல்லது இழிசொல்.
= குறைசொல் (த) → குரோச (ச).

**ஆக்சேப - Akshepa** = மறுப்பு
= செப்புதல் = பேசுதல், வலிந்து பேசுதல்.
= செப்பு (த) → சேப (ச).

**ஆகாணிக – Akanika** = குழி அல்லது பள்ளம் தோண்டுபவர்.
= காணி = நிலம் அல்லது தரை.
= காணி கன் (த) → காணிக (ச).

**ஆகம – Agama** = பரந்து விரிந்த அறிவு, அறிவியல், பொறியியல் என விரியும்.
= கமம் = பொறியியல் அறிவு, பரந்த நிலத்தின் பணி.
= கம்மர் = வேளாளர்; கம்மியர் = பொறியாளர்.
= கம்மம் (த) → கம (ச).

**ஆசம – Asama** = நீரில் சமைத்தல்.
= சமை = உணவை (அரிசி) வேகவைத்தல்.
= சமை (த) → சம (ச).

**ஆசார – Acara** = தொடர்ந்து வரும் வழக்காறு.
= சார் = தொடர், வழிவழியாக.
= சார் (த) → சார (ச).

**ஆசாரிய – Acarya** = ஆசிரியன். (மனு, 11:140:171)
= ஆசிரியன் (த) → ஆசாரிய (ச).
= ஆசிரியன் என்ற சொல், தமிழ்ச்சொல்லே.

**ஆனி – Ani** = வண்டியின் அச்சு (Rig., 1:35:6)
= ஆணி = அச்சாணி.
= ஆணி (த) → ஆனி (ச).

**ஆண்ட – Anda** = கருமுட்டை.
= அண் – அணு = கரு.
= அண் + தம் = அண்டம்.
= அண்டம் (த) → அண்ட (ச).

**ஆதங்க – Atanka** = நோய், உடல் நலக்குறைவு.
= தாங்கல் = வலமற்ற உடல், நெகிழ்வு.
= தாங்கல் (த) → தங்க (ச).

**ஆதா – Ata** = கதவு, கதவின் உறுப்பு.
= தாள் – தாழ் – தாழ்ப்பாள்.
= தா(ழ்) → தா(ச).

**ஆதாபட் – Atapat** = ஒளிர்தல், எரிதல்.
= தீ = ஒளி. தீப்படுதல் = எரிதல்.
= தீப்படு (த) → தாபட் (ச).

**ஆதாம்ர – Atamra** = சிவப்பு.
= தாமம் = சிவப்பு; தாமரை = செம்மலர்.
= தாமரை (த) → தாம்ர (ச).

**ஆதார – Atara** = நீரைக்கடத்தல் (ஓடம்)
= தாரை= நீர்.
= தாரை (த) → தார (ச)

**ஆத்மா – Atma** = உயிர், மூச்சு, காற்று.
= அகத்துமா = உள்ளிருக்கும் உயிர்க்காற்று.
= மா = சிறப்பான, பெரிய, உயர்வான.
= அகத்துமா (த) → ஆத்மா (ச).

**ஆடா – Adah** = எரிக்கப்படுதல்.
= அடு – அடுப்பு = எரிக்கும் இடம்.
= அடு (த) → ஆட (ச).

**ஆதி – Adi** = தொடக்கம் (பாணினி, 111:3:99)
= ஆதி = முரண்பாடான சொல். தமிழ்ச்சொல்லே.
= ஆ = தொடக்கம்; தீ = கதிரவன் அல்லது ஒளி.
= ஆதீ = முதலில் தோன்றிய ஒளி.
= ஆதீ – ஆதி எனச் சுருங்கியது.
= ஆதி (த) → ஆதி (ச).

**ஆதித்ய – Aditya** = அதிதியின் மக்கள் (belonging to Aditi).
= ஆதீதீ = தொன்மைக்கால ஒளி.
= ஆதீதீயர் (த) → ஆதித்ய (ச).
= ஆதித்யர் எழுவர் (Rig. 9:114:3)

**ஆதர்ச – Adarsa** = கண்ணால் நோக்குதல்.
= தெரிதல் = கண்ணுக்குப் புலனாதல்.
= தெரிதல் (த) – தர்ச (ச).

**ஆதேவ – Adeva** = கடவுள் தொடர்பான படைப்புகள்.
= தீ – தீயன் – தேவன் = கடவுள்.
= தேவன் (த) → தேவ (ச).

**ஆதா – Adha** = இங்கே வை (Rig., 7:103:1)
= ஆதா (ச) = put down.
= தா = கொடு அல்லது வை.
= தா (த) → தா (ச).

குறிப்பு= ஆதி என்ற சமற்கிருதச் சொல்லின் ஒலிப்பு, Adi, A-di, A-dhi, Adhi என்றவாறு சொல்லப்பட்டு, ஒவ்வொரு சொல்லும் தனித்தனியான பொருளைக் குறிப்பன.
= ஆதி – Adi = தொடக்கம்
= ஆ – தி = A-di = திசை, ஆதிசை.
= ஆ – தி = A-dhi = எண்ணம்.
= ஆ–தி = A-dhi = படைப்புப் பொருட்களுடன் தொடர்புடைய.
திருவள்ளுவர் கூறும் ஆதி, ஆதீ என்ற தமிழ்ச் சொல்லின் ஈற்றுக் குறில் வடிவமாகும்.

**ஆனானா – Anana** = வாய்.
= அண்ணம் = மேல்வாய் வளைவு.
= அண்ணம் (த) → ஆனானா (ச.)

**ஆநந்தா – Ananda** = மகிழ்வு.
= நந்து – நந்தி – நந்தம் = நெருக்கம்.
= நந்தி = சிவனோடு நெருங்கிய காளை.
= நெருக்கம் மகிழ்வைத் தருவது.
= நந்தம் (த) → நந்த (ச) → ஆநந்த (ச) = பெருமகிழ்வு.

**ஆநம் – Anam** = வளைவு, நெருக்கம்.
= அண்ணுதல்= நெருங்குதல், வளைதல்.
= அண்ணம் (த) → ஆநம் (ச.).

**ஆநாடா – Anata** = நெருக்கிக் கட்டுதல், பணிவுடன் கூடிய பிணைப்பு.
= நண் – நடு – நாடு – நாடா = நெருக்கிக் கட்டும் கயிறு.
= நாடா(க்கயிறு) – (த) → நாடா (ச) → ஆநாடா = இறுக்கம்.

**ஆநாதி – Anate** = வளைப்பு (ஙபோல் வளை)
= நாடி = நாடுவதால் ஏற்படும் சுற்றம்.
= நாடு – நாடி (த) → நாடி (ச) → ஆநாதி (ச).
= அநாதி (ச) = சுற்றமின்மை; ஆநாதி – சுற்றம்.

**ஆநில – Anila** = காற்றினால்.
= நில் = அசையாமை; அநில் = அசைவு.
= நில்லாத = அசைகின்ற (காற்று).
= நில் (த) → ஆநில (ச).

= அநில (ச) = அசைவற்ற; ஆநில (ச) = அசைகின்ற (காற்று)

**ஆநீல - Aneela** = நீலம், கருநீலம்..
= நீல் - நீர் = நீரின்நிறம்.
= நீல் (த) → நீல (ச).

**ஆனுகூல்ய - Anukulya** = சார்புத்தன்மை, நட்புரிமை.
= கொள் - கொள்ளுதல் = பெறுதல்.
= அணை கொள் = நெருக்கத்தைப் பெறுதல்.
= அணை கொள் (த) → ஆனுகூல் (ச).

**ஆனுபூர்வ - Anupurva** = தொடர்ந்து வரும் மரபு. (succession).
= பூர் - பூரி - பூரித்தல் = விரிதல், தொடர்தல்.
= பூரியம் = மரபு.
= பூரி (த) → பூர் (ச).

**ஆனுமானிக - Anumanika** = எண்ணம் தொடர்பான.
= மனம் = எண்ணத்திற்கான இடம்.
= மனம் (த) → மான (ச).

**ஆனுசாய - Anusaya** = மாலை.
= சாய் - சாய்தல் = மறைதல்.
= சாயுங்காலம் = மாலை.
= சாய் (த) → சாய (ச).

**ஆனுசீர்ய - Anusirya** = ஒழுங்கான, நேரான உழவு.
= சால் - சார் = உழவுப்பாதை.
= சார் (த) → சார்ய (ச).

**ஆனுக - Anuka** = நெருக்கம் (close to)
= அணை - அணு - அணுக்கம் = நெருக்கம்.
= அணுக்கன் = நெருங்கிய பணியாள்.
= அணுக்கம் (த) → ஆனுக்க (ச).

**ஆனூப்ப - Anupa** = நத்தம், நீருள்ள மருதநிலம்.
= நீர் - நீர்த்தம் - நீத்தம் - நத்தம்.
= நீர்த்த (த) → நூப்ப (ச).

**ஆநர்த்த - Anarta** = நாட்டிய மேடை.
= நாரி = யாழ்; நாரி = பெண்.

= யாழிசைக்கேற்ப ஆடும் பெண்.
= நாரியிடம் = நாட்டிய மேடை.
= நாரியிடம் (த) → நர்த்த (ச) → ஆநார்த்த.

ஆந்தம் – **Antam** = இறுதி, முடிவு.
= அம்தீ – அந்தி = பகல்வேளை முடிவு.
= அந்தி (த) → ஆந்தம் (ச) – அந்தம் (ச).

ஆப்த – **Apta** = நெருக்கமான, நம்பிக்கையான, இணைந்த.
= அப்பி – அப்புதல் = ஒன்றின் மேல் படர்ந்திருத்தல்.
= அப்பு = நீர்; உலகை அணைத்திருப்பது.
= அப்பு (த) → ஆப்த (ச).

ஆப்பனிகா – **Apanika** = வணிகர்.
= பண் – பண்ணியம் = விற்பனைப்பொருள்.
= பண்ணியர் = விற்போர், வணிகர்.
= பண்ணியர் (த) → பணிகா (ச).

ஆபாட் – **Apad** = ஊழ், அழிவு, இடையூறு.
= பாடு = இடுக்கண்.
= பாடு (த) → ஆபாட் (ச). ஆபத்து (ச).

ஆபன்னா – **Apanna** = வருவாய்.
= பண் – பண்ணியம் – பணம்.
= பணம் – வணிகத்தால் பெறும் செல்வம்.
= பணம் (த) → பன்னா (ச).

ஆப்பாஸ் – **Apas** = நீர்.
= அப்பு = நீர்.
= அப்பு (த) → ஆபாஸ் (ச).

ஆபாடலி – **Apatali** = சிவந்த.
= பாதிரி = சிவந்த மலர்.
= பாதிரி (த) → பாடலி (ச).

ஆபர = **Apura** = முழுமை, மிகுதி.
= பூர் – பூர – பூரம் = விரிவு, முழுமை.
= பூரம் (த) → பூர (ச).
= ஆபூர்ண, ஆபூரித, ஆபூர்ய, ஆபூர்ணமான ஆகிய சொற்களும் ஒருபொருளையே குறிப்பன.

**ஆபக்ஷ - Apaksha** = தேய்பிறை.
= பக்கம் - நிலவின் தேய்ந்த பகுதி.
= பக்கம் (த) → பக்ஷ (ச).

**ஆப்ரி - Apri** = நிறைவு, மகிழ்வு.
= பூரி = மகிழ்வால் உடல் பெருத்தல்.
= பூரி (த) → ப்ரி (ச).
= ப்ரீதா (ச), ப்ரீதி (ச) = மகிழ்வு.

**ஆபாஷா - Abasha** = பேச்சு, உரை.
= பேச்சு (த) → பாஷா (ச).

**ஆபூதி - Abuti** = விஞ்சிய ஆற்றல் - Superhuman power (Rig. 10:84:6)
= பூ = விரிதல், பெருத்தல்.
= பூத்தல் = பெருத்தல்.
= பூது (த) → பூத (ச).

**ஆபோக - Abogha** = மகிழ்வு, போகி (ச) = உணவு.
= பாகம் = உணவு. நளபாகம்.
= பாகம் = உணவைப் பல வகைகளாகப் பகுத்துச் சமைத்தல்.
= பாகம் (த) → போக (ச).

**ஆம்ரிதா - Amrita** = இறப்பு, சாவு.
= மார் = நெஞ்சு, மாரி = நெஞ்சு (இதயம்) நின்றுபோதல்.
= மாரி = சாவு, மரி = இறத்தல்.
= மரி (த) → ம்ரி (ச).

**அம்ர - Amra** = மாமரம்.
= மரம் (த) - ம்ர (ச).

**ஆயு - Aya** = வாழும் உயிர்.
= ஆயா = நீண்ட நாள் வாழும் பெண், மூதாட்டி.
= ஆயு (ச) = நீண்ட வாழ்க்கை.
= ஆயுர் (ச) = வாழ்வை அளித்தல்.
= ஆயுஷத (ச) = நலம் பெற வாழ்த்துதல்
= ஆயுஸ் (ச) = நீளும் வாழ்வு.
= யா (த) - ஆயா (த) → ஆயு (ச.).

**ஆர – Ara** = நீண்ட
= ஆர் = நீண்ட, ஆரம் = சக்கரக்கால்.
= ஆர் (த) → ஆர (ச).
= ஆர் என்ற தமிழின் முன்னொட்டைக் கொண்டு விரியும சொற்கள் சமற்கிருதத்தில் பல உள்ளன.
= ஆரம்ப, ஆராதன, ஆரண்ய, ஆருண என விரியும்.

**ஆரோக்ய – Arogya** = உடல் நலம்.
= ஓகம் = உடலை நம்புதல்.
= ஆர் ஓகம் = உடல்நலம்.
= ஆர் ஓக (த) → ஆரோக்ய (ச).

**ஆர்ய – Arya** = ஆரியன், உயர்ந்தோன்.
= ஆர் = உயர்வு; ஆரியன் = உயர்ந்தோன்.
= ஆர் (த) → ஆர்ய (ச).

**ஆலா – Ala** = நஞ்சு.
= ஆல் = ஆலமரத்தின் வெண்ணிறமான பால்.
= ஆல் (த) → ஆலா (ச).

**ஆவஸ் – Avas** = குடியேறு, தங்கு.
= வசதி (ச) = தங்குமிடம்.
= வாச(ச) = வீடு
= வை = பொருந்துதல், தங்குதல்.
= வைசாய் = இளைப்பாருமிடம். சாய் = படுத்தல், உறங்குதல்.
= வைசாய் (த) → வாஸ் (ச) → வாச (ச).

**ஆவிட் – Avid** = அறிவு.
= விள் = பிளத்தல், வெடித்தல்.
= விள் – வித்து – விதை = மூலம்.
= வித்து – வித்தை = அறிவு.
= வித்தை (த) → வித் (ச) – வேத் – வேத (ச).

**ஆவிஸ் – Avis** = கண்முன்னே, வெளிப்படையான.
= விழி = பார்வை, பார்க்கும் உறுப்பு.
= விழி (த) → விஸ் (ச).

**ஆவ்ரிதி – Avriti** = மூடுதல், மூடி மறைத்தல்.
= வரி = வரிதல், மூடுதல். வரிகயிறு = சுற்றுக்கயிறு.
= வரி (த) → வ்ரி (ச).

**ஆவ்விரித் – Avridh** = வளர்தல், பெருகுதல்.
= விரி = நீளுதல், விரியன் = நீண்டபாம்பு.
= விரித் (ச) = வளர்தல், வளர்ச்சி, முதுமை.
= விரித்தாசலம் = முதுமலை.
= விரி (த) → வ்ரி (ச).

**ஆவூட – Auta** = பின்னுதல் (interwoven)
= ஊடு = நடுவே, இடையே. ஊடுபாவு = பின்னல்.
= ஊடு (த) → ஊட (ச).

**ஆவேஷ்ட – Aveshta** = துணியால் மூடுதல்.
= வேய் = மூடு. கூரைவேய்தல்.
= வேய் – வேடு – வேட்டி = இடையை மறைக்கும் துணி.
= வேட்டி (த) → வேஷ்ட (ச).

**ஆவிட – Avidda** = எறிதல்.
= விடு – விடுத்தல் = எறிதல்.
= விடு (த) → விட (ச).

**ஆச – Asa** = நெருக்கம், விருப்பம்.
= ஆசை (த) → ஆச (ச)

**ஆஸ்ஸ – Assa** – விருப்பமான உணவு.

**ஆஸ்ஸக – Assaka** = உண்ணுதல்.

**ஆசேய்த்ரி – Asaytri** = உணவளித்தல், பாதுகாத்தல்.

**ஆசித்ரி – Asitri** = பேராசை.

**ஆசா – Asa** = விருப்பம், ஆசை.

**ஆசக்தி – Asakti** = ஆற்றல், திறமை, மறம்.
= செறு = அழி, கொல், நசுக்கு.
= செறு – செற்றி = மறம், வீறம்.
= செற்றி (த) → சக்தி (ச).

**ஆசிக்ஷ – Asiksha** = கற்றல், கற்றலில் விருப்பம்.
= சிக்கு – சிக்கம் = தலை.
= சிக – சிகை = தலைமயிர்.
= சிக்கம் = தலை, அறிவின் இருப்பிடம்.
= சிக்கம் (த) → சிக்ஷ (ச).

**ஆஸ்ரம் – Asrama** = முனிவரின் குடியிருப்பு.
= சேர் – சேரி = வாழிடம்.
= சேர் (த) – ஸ்ரம் (ச).

**ஆஷாட – Ashadha** = வைகாசி, ஆனி மாதக் காலம்.
= சடு – சாடு = நீண்ட, நெடிய. சாட்டை = நீண்ட கயிறு.
= சாட்டம் = நீண்ட, நீண்ட பகல்பொழுது.
= சாடு (த) → ஷாட (ச)

**ஆசாண – Ashama** = இருப்பு, இருக்கை, உயரமான இருக்கை.
= சேணம் = இருக்கை.
= சேணம் (த) – சானா (ச).

**ஆசங்க – Asanga** = கூட்டம், இணைப்பு.
= சங்கம் = அவை, மன்றம் (தமிழ்ச்சொல்லே).
= சங்கம் (த) → சங்க (ச).

**ஆசுர – Asura** = பூதம், பேய், நரன், தீயஉரு.
= சுரம் = சிவந்த அல்லது வெண்மை.
= அசுரம் = கருமை.
= அசுரம் (த) → ஆசுர (ச).

**ஆஸ்திக – Astika** = கடவுளை நம்புகிறவன்.
= ஆதீ = முழுமுதற் கடவுள். ஆதீ – ஆதி எனப்பட்டது.
= ஆதீகம் = நம்பிக்கை.
= ஆதீகம் (த) → ஆஸ்திக (ச). → Theist (G).

**ஆஸ்திட – Asthita** = குடியிருப்பு.
= திட்டு – திடல் = மேடான பகுதி.
= திட்டை = குறிப்பிட்ட பகுதி, குடியிருப்புப் பகுதி.
= திட்டை (த) → ஸ்திட்ட – ஸ்திட (ச).

**ஆஸ்சுரு – Asru** = ஒழுகுதல், சொரிதல் (நீர்).
= ஸ்ராவதி (ச) = நீரோடை.
= சொரி (த) → ஸ்ரு (ச).

**ஆகடி – Ahati** = இடித்தல், அடித்தல். (to blow, strike).
= அடி (த) → ஆஹடி (ச).

**ஆகாவ – Ahava** = படைத்தல், பூசெய் (offering)
= அவி = படைப்புப் பண்டம்.
= அவி (த) → ஹவ (ச).

**ஆஹ்வ – Ahva** = அழைத்தல்.
= வா = கூப்பிடுதல்.
= வா (த) → ஹ்வா (ச).

## இ

**இட – Ida** = பெண் ஆடு.
= பெடை (த) → இடா (ச).

**இதி – Iti** – இப்படியாக (thus).
= இப்படி (த) → இடி (ச).
= இடி கௌடில்யோ (ச) = கவுடில்யர் இப்படிக் கூறுகிறார்.

**இடம் – Idam** = உலகம், அண்டம்.
= இடம் = பரந்தது, விரிந்தது.
= இடம் (த) → இடம் (ச).

**இந்த் – Ind** = நீர்த்துளி (drop).
= விந்து – சிந்து – இந்து = நீர்த்தன்மை.
= விந்து (த) → இந்த் (ச).

**இந்த்ரா – Indra** = இந்திரன், மழைக்கடவுள்.
= விந்திரன் – இந்திரன்.
= இந்திரன் (த) → இந்த்ரா (ச).

**இந்த்ரிய – Indriya** = விந்து (Semen virile).
= விந்திரியம் = விந்து. ; இரி = கசிவு, ஒழுக்கு.
= விந்திரியம் (த) → இந்திரிய (ச).

**இட் – Idh** = ஒளி, நெருப்பு.
= அள் – அடு = வெப்பம், அடுப்பு.
= அடு (த) → இட் (ச).

**இர – Ira** = உணவு.
= இரை (த) → இரா (ச).

**இல – Ila** = இல்லம், உலகம், அசைவில்லாத.
= இல் (த) → இல (ச).

**இலி – Ili** = குறுவாள்.
= இலை = இலை போன்று கூர்மையான.
= இலை (த) → இலி (ச).

**இல்வாள – Ilvala** = வாளை மீன்.
= இலை போன்ற உருவமுள்ள மீன்.
= இலைவாளை (த) → இல்வாள (ச).

**இஷ் – Ish** = ஒப்புதல், விருப்பம்.
= இசை – இசைவு = ஒப்புதல்.
= இசை (த) → இஷ் (ச).

**இஷ்ட – Ishta** = விருப்பம்.
= இடு – இட்டு – இட்ட – இட்டம் = விருப்பம்.
= இட்டம் (த) → இஷ்ட (ச).

## ஈ

**ஈ – I** = நான்காவது எழுத்து (உயிர்)
= தமிழிலும், சமற்கிருதத்திலும் உள்ளவாறு.

**ஈஸ் – Is** = ஈயும் கடவுள்.
= ஈ = கொடு, கொடுத்தல்.
= ஈசன் = கொடுப்பவன்.
= ஈ (த) → ஈஸ் (ச).

**ஈப்ஸ் – Ips** = ஈர்ப்பு.
= ஈர்ப்பு = ஒருபொருளை அடைவதற்கான கவனம்.
= ஈர்ப்பு (த) → ஈப்ஸ் (ச).

**ஈசான – Isana** = சிவன், சிவனுக்குரிய திசை.
= ஈசன் (த) → ஈசான (ச).

**ஈஸ்வர – Isvara** = ஈசன்.
= ஈசன் + அரன் = ஈசரன்.
= ஈசரன் (த) → ஈஸ்வர (ச).

## உ

**உ – U** = ஐந்தாவது எழுத்து. (உயிர்)
= தமிழிலும் சமற்கிருதத்திலும் உள்ளவாறு.

**உ – U** = கடவுள், சிவன், பிராமணன்.
= உ = உலகு, உலகைப் படைத்த கடவுள்.
= உ (த) → உ (ச).

**உச்ச – Ucca** = மேலே, உயரே, மலைமுகடு.
= உல் = உயர்வு. உல் – உச்சம் = மேலே.
= உச்சி = மலைமுகடு.
= உச்சி (த) → உச்ச (ச).

**உட – Uta** = வீடு.
= வீடு (த) → உட (ச).

**உடு – Udu** = விண்மீன்.
= உடு (த) – உடு (ச).

**உடும்பர – Udumbara** = பேடி. (Eunuch).
= உடும்பர் (த) → உடும்பர (ச).

**உண்டுக – Unduka** = வயிறு.
= உண்டகம் (த) → உண்டுக (ச).

**உட – Uta** = மேலும் (also).
= ஊடே (த) → உட (ச).

**உத்க – Utka** = விருப்பம்.
= உள்தாக்கம் (த) → உத்க (ச).

**உத்கட – Utkada** = உயர்வு, மேன்மை.
= உள் கடவு (த) → உத்கட (ச).
= Ut (ச) = உயர்வு, பெருக்கம் (முன்னொட்டுச் சொல்).

**உத்தான் – Uttan** = மேலே, மேலெழுதல்.
= தான் = உயர்ந்த. (ut = மேலும் உயர்ந்த)
= தான் (த) → தான் (ச).

**உத்தர – Uttara** = மேட்டு நிலம், வடக்கு நிலம்.
= தரை (த) → தர (ச).

**உத்பாத – Utpatha** = தவறான வழி.
= பாதை (த) → பாத (ச).

**உத்ஸ்தல – Utsthala** = தீவு.
= உன்தளம் (த) → உத்ஸ்தல (ச).

**உட – Uda** = ஓடுதல், நகர்தல், நீர்.
= ஓடை (த) → உட (ச).

**உதர – Udara** = உள் அறை, வயிறு.
= உள்ளறை (த) – உதர (ச).

**உதா – Uda** = தூக்கியெறி.
= உதை (த) – உதா (ச).

**உதக் – Udak** = வடதிசை.
= வடக்கு (த) – உதக்கு (ச).

**உதித – Udita** = எழுதல்.
= உதை (த) → உதி (ச).

**உடும்பல – Udumbala** = ஆற்றல்.
= வலம் (த) → பல (ச).

**உதகம் – Udagam** = பார்வைக்குத் தெளிவான (Rig. 1=50=10).
= உதை (த) = வெளியேற்று, உயர்த்து.
= உதை (த) → உதக (ச).

**உத்ர – Udra** = நீர்.
= திரை (த) → த்ர (ச).

**உன் – Un** = மேன்மை, உயர்வு.
= மீ – மேல் – மேன்(மை).
= மேன்(மை) – உன் (ச).

**உன்மத – Unmatta** = அறிவற்ற, இலக்கற்ற.
= மதி (த) → மட (ச).

**உப – Upa** = உடன் இருத்தல், மேலும், துணையாதல்.
= உடன்வை – உவை (த) → உவ (ச).
= உபசார் (ச), உபகதா (ச), உபசார (ச), உபஜீவன (ச) உபதேச (க), உபநியாஸ் (க) எனவிரியும்.

**உப் – Ubh** = நிரப்புதல், மூடுதல், விரிதல்.
= உப்பு = விரிவடைதல்.
= உப்பு (த) → உப் (ச).

**உமா – Uma** = தாய்.
= அம்மா (த) → உமா (ச).

**உரக – Uraga** = பாம்பு.
= ஊர் = நகர்தல்.
= ஊரகன் = பாம்பு.
= ஊரகன் (த) → உரக (ச).

**உல – Ula** = வெப்பம்.
= உலை (த) → உல (ச).

**உஷா – Usha** = விடிகாலைப் பொழுது.
= உழை (த) → உஷா (ச).

**உ – U** = ஐந்தாவது உயிரெழுத்து (ச).
= தமிழிலும் அவ்வாறே.

**ஊ**

**ஊ – U** = ஆறாவது உயிரெழுத்து.
= ஊ (த) = பெருக்கம், வளர்ச்சி.
= ஊ (த) → ஊ (ச) வளர்ச்சி.

**ஊன – Una** = குறைவு, நிறைவின்மை.
= ஊனம் (த) → ஊன (ச).

**ஊர்நா – Urna** = கயிறு, நாடா, நூல்.
= நா = நீண்ட. ஊர்நா = மிக நீளமான.
= ஊர்நா (த) → ஊர்ன (ச).

## ரி – Ri

**ரி – Ri** = சமற்கிருதத்தில் உருவாக்கப்பட்ட உயிரெழுத்து (ஏழாவது)
= தமிழில் இல்லை. ரி – தமிழ்ச்சொல்லில் முதன்மை பெறாது.
= ரி என்ற முதல் எழுத்தில் தமிழ்ச் சொற்கள் இல்லை.

## ரீ – Ri

**ரீ – Ri** = தமிழில் சொற்கள் இல்லை.
= எட்டாவது உயிரெழுத்து (ச).

## லரி – Lri

**லரி – Lri** = ஒன்பதாவது உயிர் எழுத்து.

## லரீ – Lri

**லரீ – Lri** = பத்தாவது உயிரெழுத்து.

## ஏ – E

**ஏ – E** = சமற்கிருதத்தில் தமிழைப் போன்று எகரக் குறில் இல்லை.
= ஏ (ச) = பதினோராவது உயிரெழுத்து.

**ஏக – Eka** = முதல், ஒன்று.
= க = தமிழில் ஒன்று, முதல் உயிர்மெய்.
= க (த) → ஏக (ச) (ஏராளமான சொற்கள் விரிந்துள்ளன).
ஏ என்ற தமிழ் எழுத்து கூப்பிட்டொலியைக் குறிப்பதாகும்.

**ஏட – Eta** = அருகில் வா.
= ஏடா என விளிப்பதை ஒப்பு நோக்குக.
= ஏடி (ச), ஏட்யா (ச) என விரியும்.
= ஏ (த) → ஏட (ச).

**ஏடா – Eda** = பெட்டை, பெடை, மறி.
= பெடை (த) → ஏடா (ச).

**ஏட் நா – Etna** = மூச்சை வெளியே விடுதல்.
= நாசி = மூச்சு, மூக்கு.
= விடுநா (த) → எட்நா (ச).

**கன்ச – Kansa** = கனிமக் கலம் (Metal Vessel).
= கல் – கள் – கனி = கனிந்த மாழம்.
= கனிமம் (த) → கன்ச (ச).

**ககட (Kakada)** = சுழற்சி (Whirling).
= சகடம் (த) → ககட (ச).

**கக்ஷ – Kahsha** = மறைவிடம் (Rig. 10=28=4).
= கள் + கம் = கக்கம் = கருமை, மறைவு.
= கக்கம் = விலாவும் கையும் இணையுமிடம்.

= கக்கம் (த) → கக்ஷ (ச).
= கக்கூஸ் (பாரசீகம்) = மறைவான கழிப்பிடம்.

**கங்கட – Kankata** = மார்புப்பட்டயம்.
= கங்கடம் (த) → கங்கட (ச).

**கங்கண – Kankana** = வளைவான.
= கங்கு = வளைவு; கங்கணம் = வளையம்.
= கங்கணம் (த) → கங்கண (ச).

**கச – Kaca** = கருமை, மயிர்.
= கயம் = கருமை.
= கயம் பூ – காயாம்பூ = கருமலர்.
= கயம் (த) → கச (ச).

**கச்ச – Kaccha** = கரை (shore).
= கச்சம் = நீர்க்கசிவு.
= கச்சம் (த) → கச்ச (ச).

**கடு – Katu** = கடுமை (bitter).
= கடுமை (த) – கடு (ச).

**கன் – Kan** = சிறிய.
= கண், கண் இமை.
= fiao (kanayati) = இமை மூடித்திறத்தல்.
= கண்ணடி (த) → கனடி (ச).

**கன – Kana** = சிறுவிதை.
= கண்ணி = சிறிய விதை (அ) முடிச்சு.
= கண்ணி (த) → கன (ச).

**கண்டக – Kantaka** = முள்.
= கண்டம் = கூர்மை, முள்.
= கண்டங்கத்திரி = முட்செடி.
= கண்டம் (த) → கண்டக (ச).

**கந்த்த – Kantha** = கழுத்து.
= கண்டம் = இணைப்பு, தொண்டை
= கண்டம் (த) → கந்த்த (ச).

**கதா – Katha** = பேசுதல், உரையாடுதல்.
= கதைத்தல் = பேசுதல் (யாழ்ப்பாணம்).

= கல் + தை = கதை. கற்றவற்றை இணைத்தல்.
= கதை (த) → கதா (ச).

**கடம்ப – Kadamba** = மணம் (பரப்புதல்), விரிதல்.
= கடம்பம் = சிவப்புப் பூக்கள் உள்ள மரம்.
= கடம்பம் (த) → கடம்ப (ச).

**கன – Kana** = சிறிய
= கண் (த) → கன (ச)

**கன்யா – Kanya** = கன்னி (virgin)
= கன்னி (த) → கன்யா (ச).

**கனிஷ்க – Kanishka** = இளையவன்.
= கணிக்கன் (த) → கனிஷ்க (ச).

**கந்தார – Kandara** = மலைப்பகுதி.
= கல் + தரை = கந்தரை = குறிஞ்சிநிலம்.
= கந்தரை (த) → கந்தார (ச).

**கபட – Kapta** = ஏய்ப்பு, முறையற்ற.
= கள் + வடு = கவடு. வடு = பெருகுதல்.
= கவடு (த) → கபட (ச).

**கபாட – Kapata** = கதவு, திறப்பு.
= கதவு (த) → கபாட (ச).

**கபால – Kapala** = கலம், ஓடு, குடுவை.
= கைக்கலம், கவலம் = கலம்.
= கவலம் (த) → கபால (ச).

**கபி – Kapi** = குரங்கு.
= கவை = கிளை. கவி = குரங்கு.
= கவி (த) → கபி (ச).

**கபில – Kapila** = கப்பு நிறம், குரங்கின் நிறம்.
= கப்பு (த) → கபில (ச).

**கம் – Kam** = நீர்த்தன்மை.
= க + அம் = கம் (த) = நீர்.
= கமத் தொழில் = வேளாண்மை.
= கம் (த) → கம் (ச).

**கமல - Kamala** = நீர்ப்பூ, தாமரை.
= கம் + அலம் = தாமரை.
= அலம் = விரிதல், அலர்தல்.
= கம்மலம் (த) → கமல (ச).

**கர - Kara** = (கை) வினைஞன்.
= கரம் = கை; கையால் செய்யும் வேலை.
= கரம் (த) → கர (ச).

**கரக - Karaka** = நீர்க்குடுவை.
= கார் + அகம் = நீர்க்கலம்.
= காரகம் (த) → கரக (ச).

**கரண - Karana** = திறமையான வேலை.
= கரம் + அணம் = உயர்வான வேலை.
= கரணம் (த) → கரண (ச).

**கரி - Kari** = யானை.
= கரி (த) → கரி (ச).

**கர - Kara** = நீண்ட ஒளிக்கதிர்.
= கரம் = நீண்ட; நாள்கரன் = கதிரவன்.
= தீக்கரன் = தீங்கரன் → தினகரன் (ச).
= கரம் (த) → கர (ச).

**கரம்ப - Karambha** = கன்னி நிலம்.
= கரம்பு = பக்குவப்படாத நிலம்.
= கரம்பு (த) → கரம்ப (ச).

**கற்கட - Karkata** = பக்கவாட்டில் கடத்தல், நடத்தல்.
= கற்கடம் = நண்டு.
= கற்கடம் (த) → கற்கட (ச).

**கர்ண - Karna** = நீளமான, வெளியே நீண்டிருக்கின்ற.
= கடு நா(த) = நீளமான கடுமையான மலைத்தொடர்.
= கர்ணா = நீண்ட காது, முகத்திலிருந்து வெளியே நீண்டிருப்பது.
= கன்னம் (த) = அரை வட்டமான துண்டு, காது.
= கன்னம் (த) → கர்ண (ச).
= கர்ண (ச) = காதை மட்டும் குறிப்பதன்று.

**கர்நாட – Karnata** = கரு நாடகம்.
= கருநாடு = கரிசல் நிலநாடு.
= கருநாடு (த) → கர்நாட (ச).

**கர்டம – Kardama** = கருமண் (clay)
= கருமண் (த) → கர்டம (ச).

**கர் பராச – Karparasa** = கற்பாறை மணல், பெருமணல்.
= கற்பாறை (த) → கர்பராச (ச).

**கர்ப்பூர – Karpura** = எரிந்து மணமாய் விரியும் கல்.
= பூரம் = எரிந்து பரவுதல்.
= கற்பூரம் (த) → கர்ப்பூ (ச).

**கர்மன் – Karman** = செயல், பணி.
= கரம் = கை, செயல்.
= கரமான் = கருமான் = தொழிலாளி.
= கருமான் (த) → கர்மன் (ச).

**கர்வட – Karvata** = நீண்ட கருமலை.
= வடு – வட = நீள்வது, நெடியது.
= கரு = மலை; கருவடம் = நீண்ட மலைத்தொடர்.
= வடுத்தல் = நீளுதல்; வடம் = நீண்ட கயிறு.
= கருவடம் (த) → கர்வட (ச).

**கர்ஷ – Karsha** = வேளாண்மை, உழுதல்.
= கார் = மழை; காராளன் = வேளாளன்.
= கார் செய்(தல்) = வேளாண் தொழில்.
= கார் செய்(த) → கர்ஷ (ச).

**கல் – Kal** + அசைத்தல், எடுத்தல்.
= கல் (த) = தோண்டுதல், பறித்தல், எடுத்தல்.
= கல் – கல்வி = வெளிக் கொணர்தல்.
= கல் (த) → கல் (ச.).

**கலக – Kalaka** = உரைநடை (Prose).
= கல் + க = கற்க = படித்தல்.
= கற்க (த) → கலக (ச).

**கலங்க – Kalanka** = களங்கம் (blame).
= கலங்க (ச) = கருமை, நிழல் (நிலவின் புள்ளி).
= களங்கம் (த) → கலங்க (ச).

**கலஞ்ச – Kalanja** = எடை.
= கழஞ்சு (த) → கலஞ்ச (ச).

**கலத – Kalata or Kutala** = குடில்.
= சிறுகுடிசை.
= குடில் (த) → குடல (ச).

**கலத்ர – Kalatra** = புணர்ச்சி.
= கலத்தல் (த) → கலத்ர (ச).

**கலந்தர – Kalandara** = சாதிக் கலப்பு (mixed caste).
= கலந்தவன் (த) → கலந்தர (ச).

**கலம – Kalama** = எழுதுகோல்.
= கலம் (த) = இறகு (மயில்).
= கலம் (த) → கலம (ச).

**கலச – Kalasa** = கலம் (water pot).
= கலயம் (த) → கலச (ச).

**கலஹ – Kalaha** = சண்டை, குழப்பம்.
= கலகம் (த) → கலஹ (ச).

**கலா – Kalaa** = நிலவின் 16இல் ஒரு பகுதி. (one sixteenth of the moons dia).
= கலை (த) = நிலவு, நிலவின் பக்கம்.
= கலை (த) → கலா (ச). (Rig. 8:47:17).

**கலி – Kali** = இறுதி யுகம் (the last yuga).
= கழி (த) = இறுதி; கழிமுகம்.
= கழி (த) → கலி (ச).

**கலிங்க – Kalinga** = மகாநதி கலக்குமிடம், ஒருநாடு.
= கழிங்கம் (த) → கலிங்க (ச).

**கலுஷ – Kalusha** = சேற்று நீர்.
= கலங்கல் (த) = தூய்மையற்ற.
= கலுழ (த) → கலுஷ (ச).

**கல்க – Kalka** = கரும்பசை (oil sediment).
= கல் + கம் = கட்கம், கக்கம்.
= கக்கம் (த) → கல்க (ச).

**கல்பனா – Kalpana** – மெருகேற்றுதல் (fashioning)
= கற்பனை (த) → கல்பனா (ச).

**கல்மாஷ – Kalmasha** = கருமை, அழிவு.
= கல்மாயம் = மைமாயம்.
= கல்மாயம் (த) → கல்மாஷ (ச).

**கல்யாண – Kalyana** = நல்ல, அழகான, மகிழ்வான.
= கல்யாணி (ச) = நல்ல பெண்.
= கலி (த) = ஆரவாரம், மகிழ்ச்சி.
= கலி + ஆணம் = கலியாணம் (த).
= கலியாணம் (த) – கல்யாண (ச).

**கவக – Kavaka** = நாய்க்குடை, காளான்.
= கவிகை = குடை.
= கவிகை (த) → கவக (ச).

**கவாட – Kavata** = கதவு.
= கவடம் = கதவு, வழி.
= கவடம் (த) → கவாட (க).
= கவாடபுரம் = இரண்டாம் தலைநகரம்.

**கவி – Kavi** = புலமை, அறிவு.
= கவி, கவிஞன் = புலவன்.
= கவி (த) → கவி (ச).

**கச – Kasa** = கருமை.
= கயம் (த) → கச (ச).

**கஸ்மல – Kasmala** = கழிவு.
= கயமலம் (த) → கஸ்மல (ச).

**கஸ்மீர – Kasmira** = காஷ்மீரம் (Kashmir).
= காயமேரு = கரியமலை.
= காயமேரு (த) → கஸ்மீர (ச).

**கஸ்யப** – Kasyapa = காசிபன், முனிவன்.
= காயவன் (த) → காஸ்யப (ச).

**கஷ் – Kash** = சுரண்டு, தேய்.
= காய் (த) = காயப்படுத்து, கொல்.
= காய் (த) → கஷ் (ச).

**கஷாய – Kashaya** = வெளிர் சிவப்பு, கருமை. (dull colour)
= காயம் (த) → காஷாய (ச).

**காக – Kaaka** = காக்கை. (பாணினி, 2=3=17).
= க (த) = கருமை. க + க = கடுங்கருமை.
= க + க + ஐ = அழகிய கருமை.
= காக்கை (த) → காக (ச).
(கா கா எனக் கத்துவதால் காக்கா எனப்பட்டது என்பது பிற்கால வழக்கு.)

**காகனக – Kakanaka** = பெருநோய், குட்டம்.
= க + கண் = கரும்புள்ளி அல்லது புண்.
= ககண்ணம் = கரும்புள்ளி.
= ககண்ணம் (த) → காகனக (ச).

**காகடி – Kaakati** = காகதீயர்கள், நாகபுரி மரபு.
= காகுடி = கரிய நிறமக்கள்.
= காகுடி (த) → காகடி (ச).

**காகண்டி – Kaakandi** = கருவிழி, காகுடியினர் நகரம்.
= காகண் = கருவிழி, கருமை.
= காகண்டி (த) → காகண்டி (ச).

**காகிணி – Kaakini** = கால் பணம், நான்கில் ஒன்று.
= கண் – கிண் – கிணி = சிறிய.
= கால் கிணி = நான்கில் ஒன்று.
= கால்கிணி (த) → காகிணி (ச).

**காகூ – Kaaku** = காக்கக் கூவுதல் (voice in distress).
= காக்கக் கூவு – சுருக்கி, காகூ எனப்பட்டது.
= காகூ (த) → காகூ (ச).

**காகோள – Kaakola** = கரு நஞ்சு.
= காகாளம் = கரிய நஞ்சு, காக்கை, பாம்பு.
= காகாளம் (த) → காகோள (ச).

**காக்ஷி – Kaakshi** = காட்சி, பார்வை.
= கண் – காண் – காட்சி.
= காட்சி (த) → காக்ஷி (ச).

**காஉ – Kaaga** – காக்கை.
= காக்கை (த) → காக (ச).

**காகாஸ்** – **Kaagaz** = தாள்.
= காகாழ் = கெட்டியான தாள்.
= காழ் (த) → காஸ் (ச).
= காகஸ், காகிதம் எனப்பட்டது.

**காச** – **Kaaca** = கருஞ்சாம்பல், கழிவு (Alkaline)
= காயம் (த) → காச (ச).

**காண** – **Kaana** = ஒற்றைக் கண்.
= கண் (த) → காண (ச).

**காண்ட** – **Kaanda** = கணு, பகுதி **(division).**
= கண் = முடிச்சு (joint).
= கண் – கண்டம் = துண்டு.
= கண்டம் (த) → காண்ட (ச).
= கண் – காண் – காண்டம் = நூலின் ஒரு பகுதி.
= காண்டம் (த) → காண்ட (ச).

**காண்டிர** – **Kaandira** = வில்லாளன்.
= கண் திறத்தால் இயக்கப்படும் கருவி.
= கண் திறம் (த) → காண்டிர (ச).

**காதார** – **Kaatara** = காட்சியில் தோன்றும் ஐயப்பாடு.
= காண் திறம் (த) → காதர (ச).
= காண் திறம் குறைவதால் தோன்றும் ஐயம்.

**காதல** – **Kaatala** = கரியநிறம் கொண்ட பெருந்தலை மீன்.
= காதலை (த) → காதல (ச).

**காதிர** – **Kaatira** = கடற்கரை (பாணினி 6=1=155).
= திரை = கடல்.
= திரை (த) → திர (ச.).

**காந்த** – **Kaanta** = அன்பு, ஈர்ப்பு, அழகு.
= கண் – காண் – காண்மம் – காமம்.
= கண் – காண் – காண்தம் – காந்தம்.
= காந்தம் (த) → காந்த (ச).

**காந்தி** – **Kaanti** = அழகு (splendour).
= காண் + தீ = காந்தீ – காந்தி = சிவந்த அழகு.
= காந்தி (த) → காந்தி (ச).

**காந்தார – Kaantaara** = காடு.
= காண் – காடு = கண்ணுக்கு எட்டும் தொலைவு.
= தரை (த) → த்ர (ச) → தார
= காண்தரை = காட்டுப்பகுதி அல்லது காடு.
= காண் தாரை (த) → காந்தார (ச).

**காபட – Kaapata** = வஞ்சகம்.
= கவடு (த) → காபட (ச).

**கபாலா – Kaapaala** = மண்டை, மண்டையோடு.
= க + ஆலம் = கவாலம் = ஆலமரம் (சிவன்).
= மரங்களில் பெரியது தலையாயது ஆல்.
= க = சிவன்; ஆல் = சிவனுக்குரிய மரம்.
= ஆல் = தலையின் உருவகம்.
= கவாலம் (த) → காபால (ச.).

**காபி – Kaapi** = குரங்கு.
= கவை = கிளை. கிளையின் விலங்கு.
= கவை – கவி = குரங்கு.
= கவி (த) → கபி – காபி (ச).

**கபில – Kaapila** = பழுப்பு நிறம், குரங்கின் நிறம்.
= கப்பு = பழுப்பு அல்லது கருமை.
= கப்பு (த) → கப்பில (ச).

**காம – Kaama** = விருப்பம் **(desire)**
= கண் = காண் – காண்மம் – காமம் = பார்வையால் தோன்றும் விருப்பம்.
= காமம் (த) → காம (ச) – (பாணினி, 3:3:153)
= காமன, காமம், காமய, காமல, காமலி, காமலிக எனவும் விரியும்.

**காயா – Kaayaa** = கடவுள், பிரசாபதி (பாணினி, 4:2:25)
= க = சிவன்; யா = தென்திசை.
= கயா = தென்னாடுடைய சிவன்.
= க + யா (த) → காயா (ச) – (Rig. 10:12:1).

**காய – Kaaya** = உடல், உடல் தொடர்புடைய.
= காயம் (த) → காய (ச).

**காயமன – Kaayamana** = குடிசை, புல்லால் வேயப்பட்டது.
= காய் = காய்ந்த புல் அல்லது கோரை.
= காயமனை = கோரையால் வேயப்பட்டது.
= காயமனை (த) → காயமன (ச).

**கார – Kara** = செயல் **(doing).**
= கரம் = செயலுக்குரிய உறுப்பு.
= கரம் (த) → கார (ச).

**காரண – Karana** = ஒரு செயலுக்கான அடிப்படை (cause).
= கரம் + அணம் = உயர்வான செய்கை.
= கார் + அணம் = மழைக்கான மூலம்.
= காரணம் (த) → காரண (ச).

**காரிக – Karika** = நாட்டியப் பெண், கருப்பி.
= காரிகை = கைகளை அசைத்த நடிப்பு.
= காரி = கருமை, அழகு.
= காரிகை (த) → காரிக (ச).

**கார – Kaara** = வரி (பாணினி, 6:3:10)
= கார் = நெல்; வரியாகச் செலுத்தப்படும் நெல்.
= கார் (த) → கார (ச).

**காரு – Kaaru** = பணி செய்பவன் (doer).
= கரம் = கை, கைவேலை செய்வோன்.
= கரம் (த) → காரு (ச).

**காருண்ய – Kaarunya** = பொதுவாக இரங்குதல் (compassion).
= கார் + உண் + நீர் = காருண்ணி எனப்பட்டது.
= காருண்ணி = கருமேகம் தரும் மழை.
= மழை = இரக்கம், கொடையின் உருவகம்.
= காருண்ணி (த) → காருண்ய (ச).

**கர்ணா – Karna** = காது, வளைவானது.
= கார் = வெளியே நீண்டுள்ள, உப்பலான.
= கார்நா = வெளியே நீண்டுள்ள (காது).
= கார்நா (த) → கர்ணா (ச).

**கர்த்தா – Kaarta** = கடவுள்.
= கரு = கடவுள்; அத்தன் = தந்தை.
= கருத்தன் = தந்தையாகிய கடவுள்.
= கருத்தன் (த) → கர்த்தா (ச).

**கார்த்திகா - Karthiga** = கார்த்திகை.
= கார்த்தீ = மழைக்காலத்தில் ஒளிரும் மீன் (Pleiads).
= கார்த்தீ (த) → கார்த்தி (ச).

**கார்த்திகேயா – Kaartikeya** = முருகன் (ஸ்கந்தன்).
= கார் + தீ + சேய் = கார்த்தீ மீன்கள் வளர்த்த குழந்தை.
= கார்தீசேயன் (த) → கார்த்திகேயா (ச).

**கார்தாம – Kaardama** = சேறு.
= கார் = கருமை; தாமம் = சிவப்பு.
= கார்த்தாமம் = கருமையும் செம்மையும் (சேறு).
= கார்த்தாமம் (த) → கார்தாம (ச).

**கார்பாச – Kaarpaasa** = பருத்தியால் நெய்யப்பட்ட.
= கார் = கரிசல் மண்ணில் விளைந்த பருத்தி.
= பாவ = நெய்ய.
= கார்பாவ (த) → கார்பாச (ச).

**கார்ய – Kaarya** = செயல், செயல் தொடர்பான, விளைவு.
= கார் + இயம் = செயலுக்கான விளக்கம், செயல்பாடு.
= கார் + அணம் = செயலுக்கான உந்துதல்.
= காரணம் = உந்துதல்; காரியம் = செயல்பாடு.
= காரியம் (த) → கார்ய (ச).

**காலா – Kaala** = கருமை, நீலம்.
= காள் – காளம் = கருமை.
= காளம் (த) → கால (ச).

**காலகேய – Kaalakeya** = கருப்பன், அசுரன்.
= காளசேயன் = கருப்பன்.
= காளசேயன் (த) → காலகேய (ச).

**கால – Kaala** = பொழுது **(time).**
= காலம் (த) → கால (ச).

**காலிங்க – Kaalinga** = கலிங்கம் (நாடு), கருமையான.
= காள் = கருநாகம், யானை, இரும்பு.
= காள் அங்கம் = கருமை கலந்த.
= காளங்கம் (த) → காலிங்க (ச).
= கழிங்கம் (த) = காலிங்க (ச).
= கழிங்கம் (த) → காலிங்க (ச).

**காலிசி – Kaalici** = யாமன், காலன், நீத்தார் கடவுள்.
= காலன் (த) → காலிசி (ச).

**காவ்ய – Kaavya** = சொல்லப்பட்ட (uttered).
= கா = விருப்பம் அல்லது விரும்பு.
= கா + இயம் = கவர்ந்த உரை (தொல். 845).
= காவியம் (த) → காவ்ய (ச).

**காசி – Kaasi** = ஒளிர்கின்ற.
= காய், காய்தல் = வெயில் காய்தல், ஒளிர்தல்.
= காயச் செய், காய்செய் (த) → காசி (ச).

**காஷ்யாய – Kaashyaya** = பழுப்பு நிறம், கருமை நிறம்.
= காயம் (த) → காஷ்ய (ச).

**கின்கின – Kinkina** = மணி (bell), பறை (drum), குறுந்தொகை 148.
= கிண்கிணி = கிண்ணம் போன்ற சிறுபறை.
= கிங்கிணி (த) → கின் கின (ச)

**கிடிக – Kitika** = ஆயுதம் **(weapon).**
= கிட்டி = கிடுக்கிப்பிடுக்கும் கருவி.
= கிட்டி (த) → கிடிக (ச).

**கிரண – Kirana** = ஒளிக்கற்றை
= கரம் – கரணம் = நீண்ட, நெடிய (கதிர்).
= கரணம் (த) → கிரண (ச).

**கிரிட – Kirita** = ஒளி, அணி, ஒளிரும் மணி முடி (crown).
= கரம் + இடம் = ஒளிரும் இடம்.
= கரவிடம் (த) → கிரிட (ச).

**கிலாச – Kilasa** = படர்தல், விரிதல் (நோய் பரவுதல்).
= கீழ்சாய் = உள்ளுக்குள் சரிதல், பரவுதல்.
= கீழ்சாய் (த) → கிலாச (ச).

**கில – Kila** = மரத்துண்டு.
= கிளை (த) → கில (ச).

**கு – Ku** = குறைவை விளக்கும் முன்னொட்டு.
= கு = குறைவு (deficiency)
= கு (த) → கு (ச).

**கு – Ku** = நிலம் (earth).
= குயம், குவலயம் = மண், நிலம், உலகம்.
= குயவன் = மண்வேலையாள்.
= கு (த) → கு (ச).

**குகுர – Kukura** = குறைபாடுள்ள (mixed caste).
= குறை = தரம் தாழ்ந்த.
= குறை (த) → குர (ச).

**குக்ஷி – Kukshi** = குடுவை, கொள்கலம், அடிவயிறு, உள்ளே.
= குழி (யான கலம்) = வயிறு.
= குழி (த) → குக்ஷி (ச).

**குன்சி – Kunci** = சிறிய, குறைந்த.
= குஞ்சு – குஞ்சி (த) → குன்சி (க).

**குஞ்சர – Kunjara** = தொங்குகின்ற, நீண்ட.
= குஞ்சரம் = தொங்கும் கையுடைய யானை.
= குஞ்சரம் (த) → குஞ்சர (ச)

**குட் – Kut** = குடம். (water pot).
= குள் – குடு – குடுவை.
= குடம் (த) → குட (ச).

குட – Kuta = இல்லம், வீடு.
= குடில் – குடி – குடிசை – குடும்பம்.
= குடி (த) → குட (ச).

**குடக – Kutaka** = வளைவு.
= குள் – குட – குடா = வளைவான நீர்ப்பகுதி.
= குடகம் = மேடு பள்ளமான மேற்குப் பகுதி.
= குடகம் (த) → குடக (ச).

**குடி – Kuti** = குடிசை. (hut).
= குடி (த) → குடி (ச).

**குடும்ப(ம்) – Kutumba(m)** = இல்லத்தார் (family).
= குடி – குடும்பு – குடும்பம்.
= குடும்பம் (த) → குடும்ப (ச).

**குட்ட – Kutta** = அறுத்தல், அரைத்தல் (grinding).
= குடை – குடைதல் = துளையிடுதல்.
= குடை (த) → குட்ட (ச).

**குட்டார – Kuttara** = பாலியல் நுகர்வு, இன்பம்.
= கொட்டம் = அத்துமீறிய பாலியல் வன்முறை.
= கொட்டம் (த) → குட்டார (ச).

**குனி – Kuni** = குறைவு.
= கூன் – கூனன் – கூனி.
= கூன் (த) → குனி (ச).

**குணிக – Kunika** = ஆசிரியன், புலவன், முனிவன்.
= கணியன் = அறிஞன்.
= கணியன் (த) → குணிக (ச).

**குந்த – Kuntha** = (சும்மா) உட்கார்ந்திருப்பவன் (Lazy)
= குந்தன் = குந்தியிருப்பவன்.
= குந்தி = உட்கார்ந்திருக்கும் குரங்கு.
= குந்து (த) → குந்த (ச).

**குண்ட – Kunda** = கலம், யானை (வளைவான).
= குள் – குண் – குண்டு = யானை, சட்டி.
= குண்டு (த) → குண்ட (ச).

**குண்டல – Kundala** = காதணி.
= குண்டலம் = வளைவான காதணி.
= குண்டலம் (த) → குண்டல (ச).

**குப்யா – Kupya** – பண்டக சாலை, விற்பனைக் கூடம்.
= குப்பு = குவித்தல், சேர்த்தல்.
= குப்பை = குவிக்கப்பட்ட (கழிவு).
= குப்பை (த) → குப்யா (ச).

**குமார – Kumaara** = மகன், சேய், இளைஞன் (முருகன்).
= கும்முதல் = பெருத்தல்.
= கும் – கும்ம – குமரி = இளம்பெண்.
= குமரி x குமரன் = இளைஞன்.
= குமரன் (த) → குமார (ச).
= குமரி (த) → குமாரி (ச).

**குமுட – Kumuda** = அழகான, கவர்ச்சியான, இளமையான.
= மடல் = இதழ் விரிந்த அல்லி.
= குமல் – குமடம் (த) → குமுட (ச)
= குமுதம் – வழக்குச் சொல்

**கும்ப – Kumba** = வளைவான (குடம்)
= கூன் – கூன்ம = வளைவான
= கூன்ம (த) → கும்ப (ச)

**குரங்க – Kuranga** = கறை, புள்ளிகளுடைய (நிலா)
= கறை (த) → குற (ச)
= கறையங்கம் (த) → குறங்க (ச)

**குல் – Kul** = இணைப்பு, சேர்ப்பு
=குலம் = இணைக்கப்பட்ட மரபினர்
= குலம் (த) → குல் (ச)

**குவளை – Kuvala** = நீர் அல்லி.
= குவளை (த) → குவளா (ச).

**குஷ் – Kuzh** = மகிழ்வு.
= குழு = கூட்டம், மரபு, கூடுவதால் ஏற்படும் மகிழ்வு.
= குழைவு = நெகிழ்வு.
= குழ் (த) → குஷ் (ச).

**குருள – Kurula** = சுருள் முடி.
= சுருள (த) → குருள (ச).

**குல்ய – Kulya** = மரபு தொடர்பான.
= குல (த) – குல்ய (ச).

**குலால – Kulaala** = குயவன், மண்ணுடையான்.
= குயவாளன் (த) → குலாள (ச).

**கூட – Kuta** = கொம்பு.
= கோடு = கொம்பு.
= கோடு (த) → கூட (ச).

**கூன் – Kun** = குறுகிய, சுருங்கிய, வளைந்த
= கூன் (த) → கூன் (ச).

**கூர்ம – Kurma** = நில ஆமை.
= குறு ஆமை (த) → கூர்ம (ச).
= கூர் ஆமை (த) → கூர்ம (ச).

**க்ரி – Kri** = கருமை, கடவுள், படைப்பு, வேலை, தொழில்.

**க்ரிட் – Krit** = செய்தல், உண்டாக்குதல்.

**க்ரிட்ட – Krita** = செய்யப்பட்ட.

**க்ரிட்டி – Kriti** = செய்து கொண்டு.

**க்ரிட்யா – Kritya** = செய்ய இருக்கின்ற.
= கரு = கடவுளுக்குரிய பெயர்.
= கருத்தன் = கடவுள்.
= கரு (த) → க்ரி (ச).

**க்ருஷி – Krishi** = கருமை, கரிசல் நிலம், வேளாண்மை.
= கரிசல் (த) → க்ருஷி (ச).

**க்ருஷ்ணா – Krishna** = கருமை, கருங்கடவுள்.
= கரு அணன் = கடவுள்.
= அணன் = உயர்ந்தோன்.
= கருவணன் (த) → க்ருஷ்ண (ச).

**கேந்த்ர – Kendra** = மைய இடம், நடுப்புள்ளி.
= தரை (த) → த்ர (ச).
= தரை = இடம், நிலம்.
= கண் தரை = மைய இடம்.
= கண் தரை (த) → கேந்த்ர (ச).

**கேச – Kesa** = தலை மயிர்.
= காயம் = கருமை.
= காயம் (த) → கேயம் → கேசம் (ச).

**கைலாச – Kailasa** = நீண்ட மலைத்தொடர்.
= கை = நீண்ட ; ஆயம் = நெடிய.
= கையாயம் (த) = நீண்ட நெடிய (மலை)
= கையாயம் (த) → கைலாய (ச).

**கைகேய – Kaikeya** = நீண்ட மரபு.
= கைசேயர் = நீண்ட மரபினர்.
= கைசேயர் (த) → கைகேய (ச).

**கைரவ – Kairava** = சூதாடி.
= கை கரவன் =திருட்டுக்கையன்.
= கையால் சூது செய்பவன்.
= கைக்கரவன் (த) → கைரவ (ச).

**கோக்க – Koka** = கூக்கூ பறவை.

**கோகில** – **Kokila** = குயில்.
= கூக்காளம் = கரிய பறவை.
= கூக்காளம் (த) → கோகில (ச).

**கோட** – **Kota** – **Kota** = கோட்டை (fort)
= கோட்டை (த) → கோட (ச).

**கோடி** – **Koti** = கூர்மை.
= கூடும் இடம் (கூடி).
= கூடி (த) → கோடி (ச).

**கோண** – **Kona** = மூலை.
= கொள் – கோள் – கோண் – கோணம்.
= கோணம் (த) → கோண (ச).

**கோனி** – **Koni** = வளைந்த.
= கோணிய (கை) = வளைந்த.
= கோணி (த) → கோணி (ச).

**கோமள** – **Komala** = மறைதல், இனிமை.
= காய் மாளல் = மறைதல்.
= காய்தல் – மாளல் = மறைதல்.
= காய்தல் – மாளல் = ஒரு பொருட் சொற்களே.
= காய் மாளன் (த) – கோமள (ச).

**கவுட** – **Kauta** = வஞ்சகமான.
= கவடு (த) → கவுட (ச).

**கவுடில்ய** – **Kautilaya** = சாணக்கியன்.
= கவடு நிறைந்தவன், வஞ்சகன், சூதுமதியன்.

**கவுமார** – **Kaumara** = மகன்.
= குமரன் (த) → குமார (அ) கவுமார (ச).

**கவுசிக** – **Kausika** = கோசிக முனிவன்,
= கோசேய் = ஆயன்.
= கோசேய் (த) → கோசிக (அ) கவுசிக (ச).

**க்ரது** – **Kratu** = முடிவெடுத்தல்.
= கருது (த) → க்ரது (ச).

**பாரத – Bharata** = *பரந்த, விரிந்த*
= *பர – பரந்த* = விரிந்த (நாடு)
= *பரதம் (த) → பாரத (ச)*

**பாரதி – Bharati** – *பரதனுக்குப் பெண்பால்*
= *பரதி (த) → பாரதி (ச)*

**பாரத்வாஜ – Bharattvaja** = *பரத வழியினர்*
= *பரதவழி (த) → பாரத்வாஜ (ச)*

**பார்யா – Bhaaryaa** = *மனைவி*
= வரி – வரியாள் = மனைவி
= வரியாள் (த) → பார்யா (ச)

**பாவ – Bhava** = *தோற்றம்*
= வாகு – வாவு (த) → பாவ (ச)

**பாவி – Bhaavi** = வருகின்ற, வரும் (எதிர்காலம்)
= வா – வரு – வரும்
= வா (த) → பாவி (ச)

**பாஷ் – Bhash** – *பேச்சு*
= வாய்ச் சொல் (த) → பாஷ் (ச)

**பாஷா – Bhashaa** = *பேச்சு, மொழி*
= வாய் (த) → பாஷா (ச)

**பாஸ் – Bhaas** = *ஒளிர்தல்*
= *பச்சை – பசுமை (த) → பாஸ் (ச)*

**பிக்ஷ் – Bhiksh** = *பிரி, பிரித்தெடு*
= *பிய் (த) → பிக்ஷ் (ச)*

**பிக்ஷ – Bhiksha** = *சிறுபகுதி, பிரிக்கப்பட்டது*
= *பிய் + செய் – பிச்செய் – பிச்சை*
= *பிய்செய் (த) → பிக்ஷ (ச)*

**பிக்ஷு – Bhikshu** = இரந்துண்பவன்
= *பிய்செய் (த) → பிக்ஷு (ச)*

**பிட் – Bhid** = *ஒடி, பிரி*
= *பிடு (த) → பிட் (ச)*

**பித்ய – Bhidya** = காட்டாறு (விரைவு)
= விடு (த) → பித்ய (ச)

**பின்ன – Bhinna** – ஒன்றைப் பலவாக்குதல்
= பிள – பிளவு – பிடு
= பிள (த) → பின்ன (ச)

**பில்ல – Bhilla** – மலை மக்கள்
= வல் – வல்ல = ஆற்றலுள்ள
= வல்ல (த) → பில்ல (ச)

**பில்லி – Bhilli** = காட்டுப் பூனை
= வல் – வல்லி (த) → பில்லி (ச)

**பி – Bhi** = அச்சம்
= பேய் (த) → பி (ச)

**பீம – Bhima** = அச்ச மூட்டும்
= பொம் – பொம்முதல் – பேருரு
= பொம்மு (த) → பீம (ச)

**புஜ – Bhuja** = கை (வீச்சு), நீண்ட
= வீச்சு (த) → புஜ (ச)

**பூதி – Bhuti** = வளர்ச்சி, பெருக்கம்
= பூது (த) → பூதி (ச)

**பூமய – Bhumaya** = பெருக்கு
= பூ = மலர்தல், விரிதல், வளர்தல்
= பூ மெய் (த) → பூமய (ச)

**பூமி – Bhumi** = நிலம், தரை, மண்
= பூ மெய் (த) → பூமி (ச)

**பூரி – Bhuri** = பெருத்தல்
= பூர் – பூரி – பூரித்தல்
= பூரி (த) → பூரி (ச)

**பூஷண – Bhushana** = அழகுபடுத்துதல்
= பூச்சு (த) → பூஷண (ச)

**ப்ரித் – Bhrit** = பெற்றிருத்தல்; அணிந்திருத்தல்
= வரி – வரிதல் (த) → ப்ரித் (ச)

**ப்ரிகு – Bhrigu** – மரத்தோடு தொடர்புடைய தீ
= விறகு (த) → ப்ரிகு (ச)

**ப்ரிக்வான – Bhrigvaana** – ஒளிர்தல், எரிதல் (wood)
= மரம் எரிவதால் ஏற்படும் ஒளி
= விறகு (த) → ப்ரிக (ச)

**பைரவ** – Bhairava = அச்சத்துக்குரிய
= பேய் + அரவு (த) → பைரவ (ச)

**போக** – Bhoga = துளைத்தல், நுழைத்தல்
= புகு (த) → போக (ச)

**ப்ரம் – Bhram** = (புறத்தே) அலைதல், திரிதல்
= புறம் (த) → ப்ரம் (ச)

## ம – Ma

**ம – Ma** = தாய்
= அம்மா (த) → மா (ச)

**மகர – Makara** = மீன், மீனின் தலை
= ம – மகரம் என்பது தமிழ் மரபு
= மீன் தலை போன்ற எழுத்து –
= ம – மகரம் (த) → மகர (ச)

**மகரந்த – Makaranda** = மலர்த்தேன்
= முகர் (த) → மகர் (ச)

**மங்கல – Mangala** = மகிழ்வு, நன்மை, நற்கூறு
= மண் +கலம் = மகிழ்வின் அடையாளம்
= மண்கலம் (த) → மங்கல (ச)
= மங்கல – மாங்கல்ய = நற்கூறு (lucky)

**மக்ன – Magna** = மூழ்குதல், மறைதல்
= மண் + கு – மக்கு = மண்ணில் மறைதல்
= மக்கு (த) → மக்ன (ச)

**மஞ்ச – Manca** = இருக்கை
= மஞ்சம் (த) → மஞ்ச (ச)

**மஞ்ச் – Manj** = மஞ்சள் நிறமான (பூ)
= மஞ்சள் (த) → மஞ்ச் (ச)

**மஞ்சு – Manju** = அழகு
= மஞ்ஞை (த) → மஞ்சு (ச)

**மணி – Mani** = ஒளிரும் கல், பரல்
= மணி (த) → மணி (ச)

**மண்ட – Manda** = தொகுப்பு, சேர்ப்பு
= மண்டு (த) → மண்ட (ச)

**மண்டல – Mandala** = இடம், நாடு, வட்டம்
= மண்தலம் (த) → மண்டல (ச)

**மத்ஸ்ய – Matsya** – மீன், மச்சம், மகரம்
= மச்சம் (த) → மத்ஸ்ய (ச)

**மதுரா – Mathuraa** = வட மதுரை
= மதுரை (த) → மத்துர (ச)

**மது – Madhu** = மயக்கம் தரும் சோமம்
= மதி (த) → மது (ச)

**மத்வ – Madhva** = கனிவான கண்கள்
= மதுவிழி (த) → மத்வ (ச)

**மத்ய – Madhya** = நடுவில்,
= மத்து மத்தி = நடுவில்.
= மத்திய (த) → மத்ய (ச).

= மத்து – மத்தி – மத்திய (த) → மத்ய (ச)

**மன் – Man** = சிந்தனை, அறிதல்
= மள் – மன் – மனம்
= மன் (த) → மன் (ச)

**மதி – Mati** = கருத்து, முடிவு
= மதி = அறிவு
= மதி (த) → மதி (ச)

**மனன – Manana** = புரிதல், ஆழ்ந்து சிந்தித்தல்
= மனம் (த) → மனன (ச)

**மனஸ் – Manas** = புலன், புரிதல்
= மனம் (த) → மனஸ் (ச)

**மனு - Manu** = அறிவு, அறிவார்ந்த, மாந்தன்
= மன், மன்பதை = மக்கள்
= மன் (த) → மனு(ச)

**மனுஷ்ய - Manushya** = மாந்தன் தொடர்புடைய
= மன்சேய் (த) → மனுஷ்ய (ச)

**மந்திரி - Mantri** = சிந்தனையாளன், அறிவுரையாளன்
= மனம் + தெரி = மனத்தைத் தெரிந்தவன்
= மனம் தெரி (தல்) → மந்திரி (ச)

**மந்திர - Mantra** = சிந்தனையின் வெளிப்பாடு
= மனம் + திறம் (த) → மந்திர (ச)

**மன்யு - Manu** = சிந்தனை வீச்சு
= மன் + உ (த) → மன்யு (ச)

**மந்த - Mantha** = கடையும் கருவி
= மத்து (த) → மந்த (ச)

**மண்ட - Manda** = கலம், பானை
= மண் + தை = மண்டை
= மண்டை (த) → மண்ட (ச)

**மந்தார - Mandaara** = ஒருவகைக் கிழங்கு
= மண்தரைக் கிழங்கு (மந்தாரை)
= மண்தரை (த) → மந்தார (ச)

**மன்மத - Manmatha** = மக்களின் மனத்தை அறிந்தவன்
= மனம் + மதி = மனமதியன்(மன்மதன்)
= மன்மதி (த) → மன்மத (ச)

**மய - Maya** = நுட்பத் தொழிலாளி, மைவேலை செய்பவன்
= மை - மாய் - மாயம் = விந்தையான தொழில்
= மாயம் (த) → மய (ச)
= மயன் = வானுலகச் சிற்பி

**மயூர - Mayura** = மயில்
= மை = கருமை, பச்சை, நீலம்
= பலவண்ண மயில்
= மை + ஊர் (த) → மயூர (ச)

**மர – Mara** = இறப்பு
= மள் – மரு – மரி = சாய்தல், இறத்தல்
= மரி (த) → மர (ச)

**மரண – Marana** = இறத்தல்
= மரித்தல் (த) → மரண (ச)

**மரு – Maru** = மலை
= மேரு (த) → மரு (ச)

**மர்கட – Markata** = குரங்கு
= மரம் + கடத்தல் = தாவுதல்
= மரம் கட (த) → மர்கட (ச)

**மர்க – Marha** = பேயின் பணி, உடலை நோயால் மூடுதல்
= மறை – மறைத்தல்
= மறை (த) → மர்க (ச)

**மர்த – Marda** = முறுக்குதல்,பிழிதல்
= முறுக்கு (த) → மர்த் (ச)

**மர்ம – Marma** = கமுக்கம், மறைவு
= மறை (த) → மர்ம (ச)

**மல – Mala** = கழிவு, தூசி, சிதைவு, மலம்
= மல் – மல்லை – மல்லி = சிறுபொருள், தூசி
= மல் (த) → மல (ச)

**மல்ல – Malla** = வலிமையுள்ள
= மல் = பாறை
= மல் – மல்லை = கடல் மல்லை
= மல் (த) → மல்ல (ச)

**மஷம் – Masham** = பொடித்தல்
= மசி (த) → மஷ (ச)

**மசி – Masi** = கருமை
= மைசி – மசி = கருமை
= மசி (த) → மசி (ச)

**மா – Mah** = பெரிய, மிகுதியான, வலுவான
= மா (த) → மா (ச)

**மகா – Maha** = பெரிய
= ம+ க = மக – மகா
= மகா (த) → மகா (ச)

**மகிஷா – Makisha** – அசுரன்
= மைகிழன் (த) – மகிஷ (ச)
= மைகிழன் + அசுரன் = மகிஷாசுரன் (ச)

**மகிளா – Mahilaa** = மணமுள்ள நஞ்சு (fragrant drug)
= பெண் மை – மையல் = பெண்
= மையலாள் = தந்திரமுள்ளவள்
= மையலாள் (த) → மகிளா (ச)

**மாத்ரி – Maatri** = அறிவாளி, திறமைசாலி
= மா + திறன் = மாத்திறன்
= மாத்திறன் (த) → மாத்ரி (ச)

**மாத்ர – Maatra** = அளவு, எடை, கோணம்
= மாத்திரை (த) → மாத்ர (ச)

**மஞ்ச – Mansca** = மஞ்சள் நிறமான
= மஞ்சள் (த) → மஞ்ச (ச)

**மாகனி = Magani** = நிலவு
= களி = மகிழ்வு
= மா களி (த) → மாகனி (ச)

**மாக – Maagha** = கருமை, மகநாள்
= மாக விசும்பு = கரிய வானம்
= மாகம் (த) → மாக (ச)

**மண்டப – Mandapa** = கூடுமிடம்
= மண்டு = கூடு
= மண்டவம் (த) → மண்டப (த)

**மாதளி – Maatali** = இந்திரன், மழை
= தளி = மழை, மாதளி= மழைக்கடவுள்
= மாதளி (த) → மாதளி (ச)

**மாதா = Maataa** = தாய்
= மா + தாய் (த) → மாதா (ச)
மா + தா = மாதா

**மாதவ – Madhava** = பெரும் எழுச்சி
= தவ்வுதல் = எழுதல்
= மாதவம் (த) → மாதவ (ச)

**மாதவி – Maadhavi** = எழும் தோற்றம்
= தவ்வுதல் (த) → தவி (ச)

**மது – Madhu** = தேன் அல்லது தேனீ
= மதி – மது (த) → மது (ச)

**மாதுரி – Madhuri** = இனிமை
= மது (த) → மாதுரி (ச)

**மாத்ய – Maadhya** = நடு, இடை
= மத்தி (த) → மத்ய (ச)

**மான – Maana** = பெருமை, உயர்வு (Pride)
= மாண் – மாண்பு (த) → மான (ச)

**மான – Maana** = வீடு, இடம், குடியிருப்பு
= மனை (த) → மான (ச)

**மாம – Maama** = தாய் மாமன்
= மாமன் (த) → மாம (ச)

**மாய – Maaya** = புலனாகாத, உண்மையற்ற
= மை – மாய் – மாயம்
= மாயம் (த) → மாய (ச)

**மாரி – Maari** = இறப்பு
= மரி (த) → மாரி (ச)

**மாருதி – Maaruti** = குரங்கு
= மரம் + உதி = மரத்தில் தோன்றும்
= மரவுதி (த) → மாருதி (ச)

**மால – Maala** = மாலை (garland)
= மாலை (த) → மால (ச)

**மாலினி – Maalini** = மாலை தொடுப்பவள்
= மாலை (த) → மாலினி (ச)

**மாலதி – Maalati** = மாலையில் பூக்கும் மலர்கள்
= மாலை + தீ (த) → மாலதி (ச)

**மாச** – **Maasa** = மாதம்
= மதி – மாதம்; மாச – மாசம்
= மாதம் (த) → மாச (ச)

**மித்ர** – **Mitra** = நண்பன், கண்ணுக்குப் புலப்படாத
= மை – தேர் – தேரன்
= மைத்தேர்வு = உள்ளார்ந்த அன்பு
=மைத்தேர் (த) → மித்ர (ச)

**மிதில** – **Mithila** = மிதிலை, ஒரு நாடு
= மைத்தில்லை = கருங்காடு
= மைத்தில்லை (த) → மிதில (ச)

**முக** – **Muka** = முகம்
= முன் – முகு – முக்க – முகம்
= முகம் (த) → முக (ச)

**முக்ய** – **Mukya** = முதன்மையான
= முக்கு (த) → முக்ய (ச)

**மூட** – **Muta** = கட்டு, தொகுப்பு
= மூடு – மூடை – தொகுப்பு
= மூடை (த) → மூட (ச)

**மூண்ட** – **Munda** = மழிக்கப்பட்ட தலை
= மொட்டை (த) → மூண்ட (ச)

**மூத்ரா** – **Mudraa** = அடையாளம்
= முத்திரை (த) → மூத்ரா (ச)

**மூனி** – **Muni** = துறவி
= முனி (த) → மூனி (ச)

**முரலி** – **Murali** = குழல் ஒலி, குழல்
= முரல் = மூங்கில்
= முரல் ஒலி (த) → முரலி (ச)

**மூர்த்தி** – **Murti** = முறிந்த, தேய்ந்த, நான்கணு, கதிரவன்
= மூள்தீ = கதிரவன்
= மூள்தி (த) → மூர்த்தி (ச)

**மூஷிக** – **Mushika** = மூஞ்செலி
= மூக்கு (த) → மூஷ்க் (ச)

**முஷ்டி – Mushti** = மூடப்பட்ட கை
= மூடு – மூட – முட்டு – முட்டி
= முட்டி (த) → முஷ்டி (ச)

**முகூர்த்த – Muhurta** = சிறிய நேரம் (48 நிமிடம்)
= மூள் ஊர்த்தம் = வரும் அல்லது எழும் நேரம்
= மூள் ஊர்த்தம் (த) → முகூர்த்த (ச)

**மூட – Mudha** = அறிவில்லாத
= மூடு – மூட – மூடன் = அறிவு திறக்கப்படாதவன்
= மூடன் (த) → மூட (ச)

**மூக – Muka** = ஊமையன்
= மூங்கையன் (த) → மூக (ச)

**மூத்ர – Mutra** = சிறுநீர்
= மூள்திரை = ஊரும் நீர்
= மூள்திரை (த) → மூத்ர (ச)

**மூல – Mula** = அடிவேர், அடிப்படை
= மூலம் (த) → மூல (ச)

**மூலிக – Mulika** = சல்லி வேர்
= மூலிகை; கை = நீளும் வேர்
= மூலிகை (த) → மூலிக (ச)

**ம்ரி – Mri** = இறத்தல்
= மரி (த) → ம்ரி – ம்ரிக (ச)

**ம்ரி நாளினி – Mrinalini** = தாமரைத்தண்டு, தாமரை
= முறிநாளம் = ஒடிபடும் தண்டு
= முறிநாளம் (த) → மிரி நாளினி (ச)

**ம்ரித் – Mrid** = செம்மை; (மிருதுவான)
= முறி + துவை = குழகுழப்பான
= முறி + துவை (த) → ம்ரித் (ச)

**மேகலா – Mekalaa** = காப்பு, அடுக்கு, சாரல்
= மேல்கலை (த) → மேகலா
= மேல்கலை – மேகலை – மணிமேகலை

**மேக** – **Megha** = முகில், கார் மேகம்
= மாகம் = கருமை
= மாகம் (த) → மேக (ச)

**மேதி** – **Medhi** = நடுப்புள்ளி, உயர் புள்ளி
= மேடு (த) → மேடி (ச)

**மேத்திர** – **Medhra** = விறைப்பான ஆண்குறி, விந்து
= நட்டமான நிலையில்
= மேல் திரை (த) → மேத்ர (ச)

**மேதி** – **Methi** = விட்டம்
= மேல் + தி (த) → மேதி (ச)

**மேத** – **Medha** = அறிஞன், மேதை
=மேல் = மேன்மையான செய்திகள்
= தை = இணைப்பவன்
= மேல் + தை= மேதை (த) → மேத (ச)

**மீனா** – **Meena** = மீனவன் மகள், மீன்
= மீன் (த) → மீன – மீனா (ச)

**மேனகா** – **Menaka** = வானுலகப் பெண்
= மேல் நகை (த) → மேனகா (ச)

**மேரு** – **Meru** = மலை
= மேல் + உரு – மேலுரு – மேரு
= மேரு (த) → மேரு (ச)

**மேஷ** – **Mesha** = ஆடு
= மேழம் (த) → மேஷ (ச)

**மெய்த்திரேய** – **Maitreya** – மெய்யான நண்பன்
= மெய்த்தரவு (த) → மைத்ரேய (ச)

**மெய்த்துண** – **Maithuna** = மைத்துணன்
= மெய்த்துணை (த) → மெய்த்துண (ச)

**மோக்ஷ** – **Moksha** = வானுலகம்
= மீ – மே – மோ = மேலே, உயரே
= மீ அகம் (த) → மோக்ஷ (ச)

**மோகன – Mohana** = தோன்றுதல், இணைதல் (பாலியல்)
= முகை – முகைத்தல்
= முகை (த) → மோக (ச)

**மவுலி – Mauli** = தலை, மேல்பகுதி
= மேழி (த) → மவுலி (ச)

**மவுலான – Maulana** = மேல்
= மேலான (த) → மவுலான (ச)

**ம்ரத் – Mrad** = மென்மை (மிருது)
= வருடு (த) → ம்ரத் (ச)

**ம்லேச்ச – Mleccha** = மேன்மை குறைவான
= மேல் எச்சம் (த) → மிலேச்ச (ச)

## ய – Ya

**ய – Ya** = இ, ஈ என்ற உயிரின் விரிவு

**ய – Ya** = தமிழில் யகர ஒற்று சொல்லுக்கு முதலில் வருவதில்லை. யா – ய எனப்பட்டது.
= யா – தொன்மையான தமிழ்ச்சொல்
= யா – பலபொருளைக் கொண்டது
= யா – ஆ எனவும் தமிழில் அறியப்படும்

**யக்ஷ – Yaksha** = வாழும் உயிர், பேய்
= யாக்கை (த) → யக்ஷ (ச)

**யஞ் – Yaj** = வழிபடுதல்
= யா = முதற்பொருள் (கடவுள்)
= யா செய் (த) → யஞ் (ச)

**யஜுர் – Yajur** = வழிபாட்டுப்பாடல்
= யாஉரை (த) – யஜுர் (ச)

**யத்ர – Yatra** = இடத்தைக் குறிப்பது
= தரை (த) → த்ர (ச)

**யாத – Yaatha** = எது அல்லது யாது?
= யாது (த) → யாத (ச)

**யாடு – Yaadu** = யாதவர்
= ஆடு, யாடு – யாடவர்
= யாடவர் – யாதவர் (த) → யாடு (ச)

**யந்த்ரா – Yantra** = கருவி
= இய – இயக்கு – இயக்கி
= இயங்கு திறம் – இயந்திறம்
= இயந்திறம் (த) → யந்த்ரா (ச)

**யம – Yama** = இயக்குபவன்
= இய – இயம (த) – யம (ச)

**யமுனா – Yamuma** = யமி என்ற சொல்லின் விரிவு
= யம – யமி = இயக்கம்
= இயமம் (த) → யமுன (ச)

**யவன – Yavana** = கிரேக்கன்
= யாவன் (தமிழ் – எபிறேயம்)
= யாவன் (த) → யவன (ச)

**யா – Yaa** = அசைவு, நகர்வு
= யா = தமிழில் ஆழமான சொல்
= யா (த) → யா (ச)

**யாத்ர – Yaatra** = தென்திசைப் பயணம்
= யா = தெற்கு
= யாத்திரை = தென்கடல் (குமரிமுனை)
= யாத்திரை (த) → யாத்ர (ச)

**யாண – Yaana** = வழி, பாதை, பயணம்
= அண் – அணை = நகர்வு
= யா அணை (த) → யாண (ச)
= பெரும் யாணம் → ப்ரயாண (ச)

**யாமன் – Yaaman** = இயங்குபவன், தென்திசைக்காரன்
= யாமன் = தமிழன்
= யாமன் (த) → யாமன் (ச)

**யாவன் – Yaavan** = தென்திசைப் பயணி
= யாவன் (த) → யாவன் (ச)
= யாமன் – யாமன் தனித்தமிழ்ச் சொற்களே

**யாக – Yaaga** = கொடை, வழிபாட்டுப்பொருள்
= யா + கை = யாகை
= யாகை (த) → யாக (ச)

**யாசனா – Yaacana** = வேண்டுதல், கேட்டல்
= யா + செய் (த) → யாசனா (ச)

**யாடவ – Yaadava** = யாதவர், இடையர்
= யாடு = ஆடு, யாடவர் = இடையர்
= யாடவர் (த) → யாடவ (ச)

**யாம – Yaama** = யாமன் (காலன்)
= யாமன் (த) → யாம அல்லது யம (ச)

**யாமுனா – Yaamuna** = தென்முனை
= யாமுனை (த) → யாமுனா (ச)

**யூ – Ya** = விரைவு
= ஊ = விரைவைக் குறிக்கும் (த) சொல்
= ஊ (த) → யூ (ச)

**யுக்தி – Y ukti** = அறிவார்ந்த செயல்
= உத்தி (த) → யுக்தி (ச)

**யுத் – Y udh** = இருவகையாகப் பிரிதல், போர்
= உத்திப்பிரிப்பு
= உத்தி (த) → யுத் (ச)

**யுவ – Yava** = மகிழ்வு, இளமை
= உவ (த) → யுவ (ச)

**யூத்த – Yutha** = வளர்ச்சி, பெருக்கம்
= ஊது (த) → யூத்த (ச)

**யோக – Yoga** = உயர்வு, இணைப்பு
= ஒக்கு – ஒக்கம் – ஓக்கம் – ஓகம்
= ஓகம் (த) → யோக (ச)

**யோக்ய – Yogya** = சரியான, நம்பகமான, உயர்வான
= ஒக்கம் – ஓக்கம் (த) → யோக்ய (ச)

**யோனி - Yoni** = பெண் உறுப்பு
= ஆ அல்லது யா = பிறப்புறுப்பு
= ஆவுடையான் = சிவன்
= ஆன் (த) → யோனி (ச)

## ர - Ra

**ர - Ra** = ர என்ற ஒலி. ரி ஒலியின் விரிவு
= ர என்ற எழுத்தில் தமிழில் தொடக்கம் இல்லை

**ரங் - Rang** = ஒழுக்கு
= இரி - இரிவு (த) → ரங் (ச)

**ரக்ஷ் - Raksh** = இரங்குதல், பாதுகாத்தல்
= இரங்கு (த) → ரக்ஷ் (ச)

**ரகு - Raghu** = விரைவு
= இறகு = இறக்கை; விரைவு
= இறகு (த) → ரகு (ச)

**ரசன - Racana** = ஈர்க்கும் பொருள்
= இரு + செய் (த) → ரசன (ச)

**ரக்த - Rakta** = சிவப்பாக்கு
= அரத்து - அரத்தம் = சிவப்பு
= அரத்த (த) → ரக்த (ச)

**ரங்க - Ranga** = நிறம்
= நிறம் (த) → ரங் (ச)

**ரஜ் - Raj** = வண்ணத்துணி
= நிறச் சீலை (த) → ரஜ் (ச)

**ரஜக - Rajaka** = வண்ணான்
= நிறக்காரன் (த) → ரஜக (ச)

**ரஞ்சன - Ranjana** = வண்ணப் படுத்துதல்
= நிறம் அஞ்சனம் (த) → ரஞ்சனா (ச)

**ரத்ன - Ratna** = சிவப்புக்கல்
= அரத்தம் (த) → ரத்ன (ச)

**ரத – Ratha** = இரு சக்கர வண்டி
= இருதை (த) → ரத (ச)

**ரந்த – Randha** = கொல், அழி
= அரி (த) → ரந்த (ச)

**ரந்தர – Randhara** = திறத்தல் (Opening)
= அரி + திற (த) → ரந்தர (ச)

**ரம்பா – Rambha** = அரிதல், வெட்டுதல், நெற்கட்டு,
= அரி= நெற்கட்டு
= அரி (த) – ரம்பா (ச)

**ரதி – Rati** = ஒளி, மகிழ்வு, இன்பம்
= தீ = பற்று, பற்றவைத்தல்
= தீ = மேலெழும் பாலுணர்வு
= தீ (த) → ரதி (ச)

**ரமணி – Ramani** = அழகு, அரிவை (இளம் பெண்)
= அரிமணி = ஒளிரும் அழகான பெண்
= அரிமணி (த) → ரமணி (ச)

**ரம்ய – Ramya** = அழகு
= அரிமை (த) → ரம்ய (ச)

**ரவ – Rava** = கூவுதல், ஒலித்தல்
= இரவு = கூவு
= இரவு (த) → ரவ (ச)

**ரவி – Ravi** = கதிரவன்
= அர = சிவப்பு
= அரவி (த) → ரவி (ச)

**ரச – Rasa** = அரிந்து பிழிதல்
= அரிசெய் (த) → ரச (ச)

**ரஹ் – Rah** = இருப்பு (தனிமை)
= இரு (த) → ரஹ் (ச)

**ரஹஸ்ய – Rahasya** = கமுக்கம்
= இருசெய் (த) → ரகஸ்ய (ச)

**ராக்ஷச – Raakshasa** = அரக்கன், கருப்பன்
= இர் – இர – இரா – இராக்கன்
= இராக்கன் (த) → ராக்ஷச (ச)

**ராக – Raaga** =சிவப்பு
= அர – அரகம் (த) → ராக (ச)

**ராஜ் – Raj** = ஒளி, முதன்மை ஒளி (1)
= அரசு, தலைவன், மன்னன் (2)
= அரி என்பதே இரண்டுக்கும் வேர்ச்சொல்லாகும்
= அரி (த) → ராச – ராஜ் (ச)

**ராத்ரி – Raatri** = இரவு
= இரா (த) → ராத்ரி (ச)

**ராமா – Raamaa** = கருமை, காக்கை
= இர் – இர – இரா – இராமன் = கரியன்
= இராமன் (த) → ராமா (ச)

**ராவண – Raavana** = கருமை
= இராவண்ணன் (த) → ராவண (ச)

**ராஷ்ட்ர – Rashtra** = அரசுக்குரிய நாடு
= அரசு நிலம் அல்லது தரை
= தரை (த) → த்ர (ச)

**ராச – Raasa** = ஒலி, பேரொலி
= உர – உரத்தல் – உரசு
= உரசு (த) → ராச

**ராகு – Raghu** = கருங்கோள்
= இரா (த) → ராகு (ச)

**ரிப் – Rop** = காயப்படுத்துதல்
= அரி –அரிப்பு (த) → ரிப் (ச)

**ரிடி – Riti** = நகர்வு, இயக்கம்
= இர் – இரிவு = நகர்வு
= இரிவு (த) → ரிடி (ச)

**ருத் – Rud** = உருத்தல், வலி
= உருத்து (த) → ருத் (ச)

**ருத்ர – Rudra** = உருத்துபவன்
= உருத்தன் (த) → ருத்ர (ச)

**ரூப் – Rup** = உருவம், உரு
= உரு (த) → ரூப் (ச)

**ரூப்ய – Rupya** = பணம், காசு
= உருவம் பொறிக்கப்பட்ட
= உருவம் (த) → ரூப்ய (ச)

**ரேகா – Rekaa** = கோடு, வரி
= வரி + கை = நீண்ட கோடு
= வரிகை (த) → ரேகா (ச)

**ரேணு = Renu** = தூசி, அணு, துகள்
= ஓரணு (த) → ரேணு (ச)

**ரேவதி – Revati** = செல்வம் மிகுந்த
= அரச – ராச – ராய – ராய்
= ராய் (ச) செல்வம்
= அரைவதி – ரேவதி (ச)

**ரோம – Roma** = கருமை, மயிர்
= இராம (த) → ரோம (ச)

## ல – La

**ல – la** = ல்ரி (lri) என்ற உயிர் மெய்யின் விரிவு
= லகரத்தில் தமிழ்ச் சொற்கள் தொடங்குவதில்லை

**லக் – Lak** = குறிக்கோள்
= இலக்கு (த) → லக் (ச)

**லக்ஷ் – Laksh** = உற்று நோக்குதல், இலக்கை நோக்குதல்
= இலக்கு (த) → லக்ஷ் (ச)

**லக்ஷண – Lakshana** = அமைவு, தன்மை
= இலக்கணம் (த) → லக்ஷண (ச)

**லக்ஷமண – Lakshmana** = இலக்கை நோக்குபவன்
= இலக்குவன் (த) → லக்ஷ்மண (ச)

**லக்ஷிய – Lakshya** = இலக்கை விரிவுபடுத்தல்
= இலக்கியம் (த) → லக்ஷிய (ச)

**லக்ன – Lagna** = இணைப்பு
= அல் + அங்கம் = அலங்கம்
= அலங்கம் (த) – லக்ன (ச)

**லகு – Lahu** = எளிமையாக்குதல்
= இளக்கு (த) → லகு (ச)

**லங்கா – Lankaa** = இலங்கை (வேர்ச் சொல் காட்டப்படவில்லை)
= இலக்கு = ஒளிர்தல், புலனாதல், விளங்குதல்
= இலங்கு (த) → லங்கா (ச)

**லங்க் – Langh** = விலகு; தவிர், முறி
= விலகு (த) – லங்க் (ச)

**லம்ப – Lamba** = அசைவு
= அலம்பு (த) → லம்ப (ச)

**லிங்க – Luiga** = அடையாளம்
= இலங்கு – இலக்கம் = குறி
= இலங்கு (த) → லிங்க (ச)

**லய – Laya** = இணைப்பு, வைப்பு
= ஆலயம் (ஆல் + அயம்) = கோயில்
= ஆலயம் (த) → லய (ச)

**லோக – Loka** = உலகம், உலகு
= உலகு (த) → லோக (ச)

## வ – Va

**வ – Va** = வளி, வானம், வாரணம்

**வன்ச – Vansa** = மூங்கில், மரபு, வழி (வம்சம்)
= அம்பு = துளையுள்ள (hollow)
= அம்புசாய் (த) → வம்ச, வன்ச (ச)

**வக – வங்க – Vaka – Vanka** = வளைவு, முறிவு
= வங்கு = வளைவு; வங்கக் கடல்

=வங்குரன் (த) → வக்கிர (ச)
= வங்கம் (த) → வங்க (ச)
= வங்கம் – பங்க எனவும் திரிந்தது
= வங்கம் – பங்க – பங்கள (ச)

**வங்கர – Vankara** = வழிவழி (descendants)
= வங்காரம் (த) → வங்கர (ச)

**வக் – Vac** = சொல், பேச்சு
= வாக்கு (த) → வக் (ச)

**வச – Vaca** = பேச்சு
= வாய்ச் சொல் = வாசொ எனச் சுருங்கியது
= வாசொ (த) → வச (ச)

**வசன – Vacana** = பேச்சு (வசனம்)
= வா சொ (த) → வசன (ச)

**வஜ் – Vaj** = வலிமை, கூர்மை
= வாய்ச்சி = கூர்மையான உளி, கோடரி
= வாய்ச்சி – வாச்சி (த) → வஜ் (ச)

**வஜ்ர – Vajra** = கடின, வன்மையான
= வாச்சிரம் (த) → வஜ்ர (ச)

**வஞ்சக – Vancaka** = குற்றமுள்ள, ஏமாற்றுகின்ற
= வன்செய் (த) → வஞ்சக (ச)

**வட – Vata** = நீளுதல், வளைதல்
= வடு – வடுத்தல் = நீளுதல்
= வடு – வடம் (த) → வட (ச)

**வடப – Vadaba** = பெண்புரவி (அஸ்வினி)
= வடவை = வடதிசையிலுள்ள மீன்
= வடவை (த) → வடப (ச)

**வண்ட் – Vant** = பிரி, பகு,
= துண்டு (த) → வண்ட் (ச)

**வட்ச – Vatsa** = வளரும் குழந்தை
வடு சேய் (த) → வட்ச (ச)

**வட்சல – Vatsala** = வளரும் குழந்தை
= வடு சால் (த) → வட்சல (ச)

**வட – Vadha** = கொல், அழி
= வெட்டு (த) → வட (ச)

**வன – Vana** = காடு, மரம்
= வல் – வண் – வண்மை = கெட்டியான (மரம்)
= வண் (த) → வன (ச)

**வந்தன – Vandana** = வாழ்த்து
= வழுத்து (த) → வந்தன (ச)

**வந்திய – Vandhya** = மலடு, மலடி
= விந்துதேய (த) → வந்திய (ச)

**வப – Vapa** = எறும்புப் புற்று
= வைப்பு – மண்குவிப்பு
= வைப்பு (த) → வப (ச)

**வப்ர – Vapra** = மதிற்சுவர்
= வைப்புஅரண் (த) → வப்ர (ச)

**வம – Vama** = வெளியேற்று, தள்ளு (ejecting)
= தும்மு (த) → வம (ச)

**வயஸ் – Vayas** = வாய்வழி உணவு, சோறு
= வாய் (த) → வயஸ் (ச)

**வயஸ்ய – Vayasya** = அகவை, வயது
= வியல் – வியவு = நீண்டவாழ்நாள்
= வியவு (த) → வயஸ்ய (ச)

**வயியு – Vaiyu** = நெய்தல், முடைதல்
= வேய் – வேய்தல் = நெய்தல்
= வேய் (த) → வயியு (ச)

**வயுன – Vayuna** = அசைவு, நகர்வு
= வேய் – வியல் = பரந்த, சுற்றுகின்றன
= வியல் (த) → வயுன (ச)

**வரக – Varaka** = உடுத்து, போர்த்து, மூடு
வரி = வரிதல் = உடுத்துதல் (ஆடை)
வரி (த) → வரக (ச)

**வரண – Varana** = தரையை மூடும் ஆறு
வரியாணம் (த) → வரண (ச)
= வரணாவதி (ச) = ஆறு

**வராக – Varaaka** = கீழ், செடி
= செடியின் வேர் தொடும் மண் அளவு
= வேர் (த) → வராக (ச)

**வரிவஸ் – Varivas** – அகன்ற அறை
= வஸ் (ச) = வசித்தல்
= வை – வைசி – வசி
= விரிவைசி (த) → வரிவஸ் (ச)

**வரிமன் – Variman** = விரிந்த, பரந்த
விரிமானம் (த) → வரிமன் (ச)

**வருண – Varuna** = வானம், மழை, நீர்
=வார் – வாரி – நீர், நீர்த்தாரை
= வாரணம் (த) = நீர், நீர்த்தாரை
= வாரணம் (த) → வருண (ச)

**வருத்த – Varutha** = குடியிருப்பு
= இருப்பு – இருத்தம் – இருத்தல்
= இருத்தல் (த) → வருத்த (ச)

**வர – Vara** = வருங்காலக் கணவர் (வரன்)
= வரும் – வருகின்ற (கணவன்)
= வரும் (த) → வர (ச)

**வரிமன் – Variman** = உயர்வான, சிறப்பான (வரன்)
= வரி மான் (த) → வரிமன் (ச)

**வராக – Varaaha** = துளைக்கின்ற, துருவுகின்ற
= மண்வரி = மண் அடுக்கு
= வரி அகம் (த) → வராக (ச)

**வரி – Vari** = ஓடை, ஆறு
= வாரி (த) → வரி (ச)

**வருக – Varuka** = மிகச் சிறிய தவசம் (grain)
= வரகு (த) → வருக (ச)

**வர்க – Varga** = பிரிவு, தனிக்குழு, வரிசை
= வரி ஆக்கம் = தனியாகப்பிரி
= வரி ஆக்க (த) → வர்க (ச)

**வர்ண – Varna** = நிறம், சாதிப்பிரிவு
= வண்ணம் (த) → வர்ண (ச)

**வர்ணன – Varnana** = பூச்சு, மெருகூட்டுதல்
= வண்ணனை (த) → வர்ணன (ச)

**வர்த – Vardha** = பெருக்கம், வளர்ச்சி
= வரித்தல் (த) → வர்த (ச)

**வர்ம – Varma** = மூடுதல், பாதுகாத்தல்
= வரிதல் = கயிற்றால் சுற்றிக் கட்டுதல்
= வரிதல் (த) → வர்ம (ச)

**வர்ஷ – Varsha** = மழை, முகில்
= வரும் அடை (மழை) = வருடை
= வருடை (த) → வர்ஷ (ச)

**வல் – Val** = திருப்பு (to turn)
= வளை (த) → வல் (ச)

**வலா – Valaa** – குகை, குடாப்பு
= வளைவான குகை
= வளை (த) → வலா (ச)

**வலய – Valaya** = கங்கணம், காப்பு
= வளையம் (த) → வலய (ச)

**வலி – Vali** = முடக்கம்
வலிப்பு (த) → வலி (ச)

**வல்மிக – Valmika** = மேடு, எறும்புப்புற்று
= வல் – வல்லம் = மேடு
= வல்மிகு (த) → வல்மிக (ச)

**வல்லப – Vallaba** = ஆற்றலாளன்
= வல்லவன் (த) → வல்லப (ச)

**வல்லரி** – **Vallari** = படரும் செடி, மேலேறும் செடி
= வல்லரி (த) → வல்லரி (ச)

**வல்லி** – **Valli** = மேடு, மலை, உலகம்

**வல்லி** = **Valli** = கொடி
= வள்ளி (க்கொடி) = கிழங்குக்கொடி
=வள்ளி (த) → வல்லி (ச)

**வல்லூர** – **Vallura** = உலர்மீன் (கருவாடு)
= வல் ஊரல்(த) → வல்லூர (ச)

**வவரி** – **Vavari** = மூடு, போர்த்து
= வேய் வரி (த) → வவரி (ச)

**வசியஸ்** – **Vasiyas** = வணிகர்
= வைப்பு = இருப்பு, செல்வம்
= வைசேயர் = செல்வத்தின் மக்கள்
= வை சேய் (த) → வசியஸ் (ச)

**வஸ்து** – **Vastu** = ஒளி தோன்றுதல்
= வேய்தீ (த) → வஸ்தி (அ) வஸ்து (ச)

**வசி** – **Vasi** = மேலாடை, ஆடை
= வேய் செய் = மூடு
= வேய் செய் (த) → வசி (ச)

**வஸ்திர** – **Vastra** = நிலத்தை மூடும் நீர், ஆறு,
= உடலை மூடும் துணி
= வேய்த்திரை (த) → வஸ்திர (ச)

**வஸ்து** – **Vastu** = ஒரு பொருளின் இருப்பிடம்
= வை – வைத்தல் – வைத்த (to seat)
= வை (த) → வஸ்து (ச)

**வாட** – **Vaata** = காற்று
= வாடை = வடதிசைக் காற்று
= வாடை (த) → வாட (ச)

**வாடி** – **Vaati** = மறைகின்ற
= வாடு – வாடி = மறைகின்ற, தேய்கின்ற
= வாட்டம் = சோர்வு
= வாடு (த) → வாடி (ச)

**வாண - Vaana** = ஒலி, இசையொலி
= பாண் - பாணர் = கலைஞர்
= பாண் (த) → வாண (ச)

**வாகர - Vaagara** = மறவன், வெற்றியாளன்
= வாகை = வெற்றி
= வாகை (த) → வாகர (ச)

**வாக் - Vac** = பேச்சு
= வாக்கு (த) → வாக் (ச)

**வாக் - Vak** = சொற்போர்
= வாக்கு (வாதம்) = முரண்பாடு
= வாக்கு (த) → வாக் (ச)

**வாக்ய - Vaakya** = சொற்றொடர்
= வாக்கு - வாக்கியம்
= வாக்கியம் (த) → வாக்ய (ச)

**வாசம் - Vaacam** = பேச்சில்லாத (silence)
= வாய் (த) → வாசம் (ச)

**வாசக - Vaacaka** = பேச்சு, சொற்றொடர்
= வாய் செய் = மொழிதல்
= வாய்செய் (த) → வாசக (த)

**வாஜ - Vaaja** = விரைவு
= வீச்சு (த) → வாஜ (ச)

**வானி - Vaani** = ஒலி, இசையொலி
= பாண் - பாணி = ஒலி
= வாய் பாணி (த) → வாணி (ச)

**வாத்ய - Vaadya** = இசைக் கருவி
= வாய் தேய் = வாயொலியற்ற
= வாய்தேய் (த) → வாத்ய (ச)

**வானர - Vaanara** = குரங்கு
= வன்அரன் = குரங்கு
= வன் அரன் (த) → வானர (ச)

**வாந்த - Vaanta** = வாய் வழி வெளியேற்றம் (வாந்தி)
= வாய்த்துளி (த) → வாந்தி (ச)

**வாபி – Vaapi** = நீர்நிலை
= வாவி (த) → வாபி (ச)

**வாபிக – Vaapika** = புலவன்
= வாய் பெய் (த) → வாபிக (ச)

**வாம – Vaama** = சரியில்லாத, குற்றமுள்ள,
= வம்பு (த) → வாம (ச)

**வாயு – Vaayu** = காற்று
= வேய் = பரந்து பரவியிருத்தல்
= வேய் – வேயு (த) → வாயு (ச)

**வாய்வு – Vaayv** = காற்று வெளியேறுதல்
வாய் ஊ (த) → வாய்வு (ச)

**வார் – Vaar** = நீர், கடல்
= வர் – வரி, வாரி = கடல்
= வாரி (த) → வார் (ச)

**வாரி – Vaary** = குளம்
= வாரி (த) → வாரி (ச)

**வார – Vaara** = நீண்ட (மயிர், வால்)
= வாரை (த) → வார (ச)

**வார – Vaara** – தோல் கச்சை
= வார் (த) → வார (ச)

**வாரக – Vaaraha** = பன்றித் தோல்
= வார் = பன்றித்தோல்
= வார் (த) → வாரக (ச)

**வார்திய – Vaardhya** = வயதான
= வாய் = நீண்ட
= வார் தேய (த) → வார்திய (ச)

**வார்ஷ – Vaarsha** = மழைக்காலம்
= வருடை (த) → வார்ஷ (ச)

**வால – Vaala** = விலங்கின் வால்
= வால் (த) → வால (ச)

**வாலி – Vaali** = குரங்கு
= வாலி (த) → வாலி (ச)

**வால்மீகி – Vaalmiki** = நீண்ட நெடிய (அறிவுள்ள)
= மிகு – மிக்கு – மீகு – மீகி
= வால் மீகி (த) – வால்மீகி (ச)

**வாஸ் – Vaas** = வாயொலி (Voice)
= வாயசைவு (த) → வாஸ் (ச)

**வாஸ் – Vaas** = பரவுதல், மூடுதல் (வாசனை)
= வேய்செய் = ஓரிடைத்தை நிறைத்தல்
= வெய்செய் (த) → வாஸ் – வாஸன (ச)

**வாச – Vaasa** = குடியிருத்தல் (வசித்தல்)
= வை + செய் = குடியிருக்கும் வீடு
= வை செய் (த) → வாச (ச)

**வாசந்த – Vaasanta** = இளமை, (வசந்த காலம்)
= வை + செம்மை = இளமை
= வைசெம்மை (த) → வாசந்த (ச)

**வாஸ்தவ – Vaastava** = வாய்மை, உண்மை
= வாய்ச் சுதை = உண்மை
= வாய்ச் சுதை (த) → வாஸ்தவ (ச)

**வாஸ்து – Vaastu** = இடத்தின் தன்மை
= வைப்பு (த) → வாஸ்து (ச)

**வாக – Vaaha** = முயற்சி, உழைப்பு
= வை + கை = உடல் உழைப்பு
= வாகை (த) → வாக (ச)

**வாக – Vaaha** = எளிதான
= வாகான – வாகு= எளிதான
= வாகு (த) → வாக
= வாகு ஏனம் (த) → வாகன (ச)

**வாகினி – Vaashini** = போர்ப்படை
= வாகை = வெற்றிகொள்ளுதல்
= வாகை (த) → வாகினி (ச)

**விகாச – Vikaca** = திறப்பு (வைகாசி)
= வேய்காயம் = வானச்சுழல் மாற்றம்
=வேய்காயம் (த) → விகாச (ச)

**விகாச – Vikaca** = காற்று வீச்சு
= வேய் காயம் = வீசும் காற்று
= வேய் காயம் (த) → விகாச (ச)

**விகாஸ் – Vikaas** = கண்ணுக்குப் புலனாகின்ற
= மேகங்கள் இல்லாத வானம்
= வேய்காயம் = வெளிர்வானம்
= வேய் காயம் (த) → விகாஸ் (ச)

**விக்ரம் – Vikram** = பக்க நடப்பு (aside)
= வைகரம் = பக்க அசைவு
= வைகரம் (த) → விக்ரம் (ச)

**விசர் – Vicar** = பரவுதல்
= வேய்சேர் (த) → விசர் (த)

**விசால் = Vical** = அகன்ற, வெளியேறுகின்ற (விசாலம்)
= வேய்சாலம் (த) → விசால் (ச)
= வியல் சாலம் (த) → விசால் (ச)

**விஜ் – Vij** = நகர்வு, விரைவு
= விசை (த) → விஜ் (ச)

**விஜ்ஜி – Vijji** = விரைவு, வெற்றி
= விசைவு (த) → விஜ்ஜி (ச)

**விஜய – Vijaya** = வெற்றி
= விசையன் (த) → விஜய (ச)

**விஞான – Vijana** = விரைவில் அறிவு பெறுதல்
= விசை + ஞானம் = விசைஞானம்
= விசைஞானம் (த) → விஞான (ச)

**விதான் – Vitan** = பரவுதல்
= வேய்தானம் (த) → விதான் (ச)

**விட் – Vid** = அறிதல், தெரிதல்
= விடை (த) → விட் (ச)

**வித்யா – Vidya** = அறிவு
= விள் – விடு – விடை = அறிதல்
= விடை (த) → வித்யா (ச)

**வித்வ – Vidva** = அறிவு
= விள் – வித்து – விதை = அறிவின் மூலம்
= விதை (த) → வித்வ (ச)

**வித்ய – Vidya** = அறிவைப் பெறுதல்
=விதை – விடை (த) → வித்ய (ச)

**விதூர – Vidura** = தொலைவு
= வேய் தூரம் (த) → விதூர (ச)

**விதேச – Videsa** = வெளி நாடு
= வேய் தேயம் (த) → விதேச (ச)

**வித – Vidha** = சிறு துளி, பிரிவு
= விதை (த) → வித (ச)

**விதி – Vidhi** = ஒழுங்கு, வரன்முறை
=விள் – விது – விதி
= விதி (த) → விதி (ச)

**விது – Vidhu** = தனியான
= வித்து = தனியொரு விதை
= விதை (த) → விது (ச)

**விநடா – Vinataa** = வளைந்த கால், ஒழுங்கற்ற நடை
= நடை (த) → நடா (ச)

**விநி – Vini** = முறையற்ற
= வீண் – வீணான
= வீண் (த) → விநி (ச)

**விநிர் – Vinir** = சரியாக வைத்தல்
= வைநேர் (த) → விநிர் (ச)

**விநாயக – Vinayaka** = தலைவன்
= வேய் நாயகன் – உலகத்தலைவன்
= விண்நாயகன் (த) → விநாயக (ச)

**விப்ர – Vipra** = அறிஞன், பெரியன்
= வேய்பெரு (த) → விப்ர (ச)

**விபக்ஷ – Vipaksha** = சிறகு, பக்க இறக்கை
= வை பக்கம் (த) → விபக் ஷ (ச)

**விபாக – Vipaaka** = சமையல்
= பகு – பாகம் = சரியான பொருள் சேர்க்கை
= பாகம் = உணவு
= வைபாகம் (த) → விபாக (ச)

**விபட் – Vipat** = பிறழ்வினை
= வைபாடு (த) → விபட் (ச)

**விபன்ன – Vipanna** = தவறு செய்தல்
= பண்ணு – பண்ணுதல்
= பண்ணு (த) → பன்ன (ச)

**விபரித – Viparita** = வட்டமாக, வளைவாகத் திரும்பு
= பரிதி (த) → பரித (ச)

**விபுல – Vipula** = விரிந்த, பரந்த
= புலம் (த) → புல (ச)

**விபிளவ – Viplava** = குழப்பம், இடுக்கண்
= பிளவு (த) → பிளவ (ச)

**விபல – Vipala** = பழமற்ற
= பழம் (த) → பல (ச)

**விபூ – Vibhu** = தோற்றம்
= பூ (த) → பூ (ச)

**விமல – Vimala** = அழுக்கற்ற
= மலம் (த) → மல (ச)

**விமான – Vimana** = வானம், வானஊர்தி
= வானம் (த) → மான (ச)

**விரக்த – Virakta** = நிறம் மா றுதல்
= அரத்தம் (த) → ரக்த (ச)

**விலாச – Vilasa** = தெளிவு, வெளிச்சம், அறிதல்
= அசைவு (த) → அச (ச)

**விசால – Visala** = அகன்ற
= வியாழ (த) → விசால (ச)

**விஷ் – Vish** = விரைவு
= விசை (த) → விஷ் (ச)

**விஷ்ய – Vshya** = நஞ்சு, விரைவில் செல்கின்ற
= விசை (த) → விஷ (ச)

**விசாட – Vishada** = வெறுப்பு
= சாடு (த) → ஷாட (ச)

**விசர்ப்ப – Visarpa** = ஊர்கின்ற
=சார் – சாரை (த) → சர்ப்ப (ச)

**விஸ்தார – Visarpa** = ஊர்கின்ற,
= சார் – சாரை (த) → சர்ப்ப (ச)

**விஸ்தார – Vistara** = விரிந்த
= தரை (த) → தர (ச)

**விகட – Vikata** = அடித்தல் (strike)
= கடி – கடித்தல் (த) → கட (ச)

**விட – Vita** = வெளியேறுதல்
= விடை (பெறுதல்)
= விடை (த) → விட (ச)

**விர் – Vir** = மறம், (வீரம்)
= வீறம் (த) → வீர் (ச)
=வீறு – வீற – வீறம்

**வீர்ய – Virya** = ஆண்மை, திறமை
= வீறியம் (த) → வீர்ய (ச)

**விரித் – Vrit** = மூடுதல்
= வரி – வரித்தல்
= வரி (த) → விரித் (ச)

**விரித்ர – Vritra** = பகைவன்
= விரித்திரன் (த) → விரித்ர (ச)

**வ்ரி – Vri** = தேர்ந்தெடு
= வரி = தேர்வுசெய் (கணவனை வரித்தல்)
= வரி (த) → வ்ரி (ச)

**வ்ருக்ஷ – Vriksha** = (வேருள்ள) மரம்
= வேர் (த) → வ்ரு (ச)

**வ்ரித் – Vridh** = விரிவு, முதுமை
= வாழ்நாள் விரிவு, வயதான
= விரிவு (த) → வ்ரித் (ச)

**வ்ரித்தி – Vridhi** = வளர்ச்சி
= விரித்தி (த) → வ்ரித்தி(ச)

**வ்ரிசிக – Vricika** = தேள்
= விரிச்சிக் கால் (த) → வ்ரிசிக (ச)

**வ்ரிஷ – Vrisha** = ஆண்மை
= விரிந்த ஆற்றல்
= விரி (த) → வ்ரிஷ (ச)

**வ்ரிஷ – Vrishaba** = ஆற்றலுள்ள காளை
= விரி (த) – வ்ரிஷப (ச)

**வேக – Vega** = விரைவு
= வீச்சு (த) → வேக (ச)

**வேணு – Venu** = (வளையும்) புல், மூங்கில்
= வண்ணுதல் = வளைதல்
= வண் (த) → வேணு (ச)

**வேத – Veda** = அறிவு, சமய அறிவு
= விள் – விதை – வித்து
= வித்து = மூலம், அறிவு
= வித்து (த) → வேத (ச)

**வெலா = Velaa** = என்லை, முடிவு, கோடு
= விளா = கோடு (உழவு தொடர்பானது)
= வினா (த) → வெலா (ச)

**வைத்ய – Vaidya** = மருத்துவன்
= வை + தீயன் = புண்ணைச் சுடுபவன்

= வைதீயன் (த) → வைத்ய (ச)
(வாளால் அறுத்துச் சுடினும் மருத்துவன்)

**வய்ர - Vaira** = வீறம்
= வீறு (த) → வய்ர (ச)

**வைசிய - Vaisya** = மண்ணின் மைந்தன்
= வைசேயன் (த) → வைசிய (ச)

**வியா - Vya** = பரவலான
= வியல் (த) → வியா (ச)

**வியாச - Vyasa** = விரிவான (அறிக்கை)
= வியல் - வியழம்
= வியழ (த) → வியாச (ச)

**வியா கூல - Vyakula** = குழப்பம், தடுமாற்றம்
= வியல் + குழப்பம்
= வியல் (த) → வியா (ச)

**வியாகரண - Vyakarana** = விளக்கம்
= வியாகரணம் (த) → வியாகரண (ச)

**வியாக்ர - Vyagra** = வலிமை, புலி
= வியல்கரம் = வல்லாளன்,
= வியல்கரம் (த) → வியாக்ர (ச)

**வியாதி - Vyaadhi** = நோய், பரவும் நோய்
= வியல்தீ (த) → வியாதி (ச)

**வியாபார - Vyapaara** = வணிகம்
= வியல் பாரம் (த) → வியாபார (ச)

## ச - Sa

**சக் - Sak** = ஆற்றல், திறன், வலம்

**சக்தி - Sakti** = மேலதே
= சொக்கு + தீ = ஆற்றல்
= சொக்குதீ (த) → சக்தி (ச)

**சகார – Sakara** = வழிவழி வருதல்
= சாய் கரம் = நீட்சி, வளர்ச்சி
= சாய்கரம் (த) → சகார (ச)

**சகட – Sakata** = வண்டி
= சாய்கடம் (த) → சகட (ச)

**சகல – Sakala** = அரை, பாதி
= கலை = நிலவு, பக்கம்
= சாய் கலை = அரை நிலா
= சகல (ச) = அரைஉடன்பிறப்பு (சகலன்)
= சாய்கலை (த) → சகல (ச)

**சகுண – Sakuna** = கூர்மையான கண்ணுள்ள பறவை
= காக்கை, பருந்து முதலியன
= சாய்கண்ணி = பறவை
= சாய்கண்ணி (த) → சகுண (ச)

**சகுணி – Sakuni** = பெண் பறவை
= சாய்கண்ணி (த) → சகுணி (ச)

**சகுந்தலா – Sakuntalaa** = பறவையின் தலைபோன்ற (அழகான)
= சாய் கண்ணித்தலை (த) → சகுந்தலா (ச)

**சங்க – Sankha** = நத்தை, ஓடு
= சங்கு (த) → சங்க (ச)

**சதா – Sata** = பெருக்கம், ஊட்டம், எண் நூறு
= சத்து = பெருக்கம்
= சத்து – சத – சதம்
= சத்து (த) → சதா (ச)

**சத்ரு – Satru** = பகை
= சாய் = மாறுபட்ட, பிறழ்வு
= சாய்த்தல் (த) → சத்ரு (ச)

**சட் – Sad** = தாக்கு, விழச்செய்
= சடு – சடுத்தல் (த) → சட்(ச)

**சனி – Sani** = காரி கோள் (சமற்கிருதத்தில் விளக்கமில்லை)
= விரைவற்ற நகர்வு (Slow moving)
= சுனி = வட்டம், வளையம்
= சுனி (த) → சனி (ச)

**சப் – Sap** = திட்டு, ஊறுசொல், (சாபம்)
= செப்பு (த) → சப் (ச)

**சப – Sapha** = குளம்பு (சரியான விளக்கமில்லை)
= சப்பை (த) → சப (ச)

**சப்த – Sabda** = ஒலி, பேச்சு, அழைப்பு
= செப்பு (த) → சப்த (ச)

**சம் – Sam** = தெளிவு, திருத்தம், அமைதி
= செம் – செம்மை (த) → சம் (ச)

**சமதா – Samatha** = அமைதியானவன்,பிராமணன்
= செம்மாந்தன் (த) → சமதா (ச)

**சமண – Samana** = அமைதி
= செம்மணம் (த) – சமண (ச)

**சமி – Sami** = ஆற்றல், உழைப்பு, முயற்சி
= செம்மை (த) → சமி

**சம் – Sam** = மகிழ்வு, நலம், வளம்
= செம்மை (த) → சம் (ச)

**சம்கர – Samkara** = வளமை, சிவன் (ருத்ரன்)
= செம்கரன் – செங்கரன் – சங்கரன்
= செங்கரம் (த) → சம்கர (ச)

**சம்கராசார்ய – Samkaraacaarya** = ஆசிரியர், நற்செய்தியாளர்
= கி.பி. 788-820, பிறப்பு – கேரளம்
= செங்கர ஆசிரியன் (த) → சங்கராசாரிய (ச)

**சம்பு – Sambhu** = மகிழ்வு, மலர்தல்
= செம்மை + பூ = செம்பூ (த) → சம்பு (ச)

**சம்பர – Sambara** = அரக்கன், ஒரு மன்னன்.
= செம்மை + அரன் = செம்பரன்
= செம்பரன் (த) → சம்பர (ச)

**சம்பள – Sambala** = பணம், செல்வம், ஊதியம்
= செம்பு + அளம் = உப்பு
= உப்பே ஊதியமாகத் தரப்பட்டது
= செம்பளம் (த) → சம்பள (ச)

**சய – saya** = படுத்தல், உறக்கம்
= சாய் (த) → சய (ச)

**சயனி – Sayani** = உறங்குமிடம்
= சாய் அணி (த) → சயனி (ச)

**சர – Sara** = (நீண்ட) கோரை, அம்பு
= சாரை = நீண்ட
= சாரை (த) → சர (ச)

**சரு – Saru** = அம்பு,விரைவு
= சர்சர் = விரைவு
= சர் (த) → சரு (ச)

**சரண – Sarana** = அடைக்கலம், பாதுகாப்பு
= அம்பு என்ற சொல்வழி நீண்டது
= சரு – சருண – சரண (ச)
= சார் (த) → சரண (ச)

**சரண்ய – Saranya** = பாதுகாப்பு
= சார் அணியம் (த) → சரண்ய (ச)

**சரவ – Sarava** = (மண்) தட்டு, கலயம், குடுவை (சருவம்), மண்கலம்.
= சேறு = மண் குழைவு
= சேறு (த) → சரவ (ச)

**சர்க்கர – Sarkara** = சிறுகல், மணி, கூழாங்கல்
= சருக்கரை (த) → சர்க்கர (ச)

**சர்மன் – Sarman** = பாதுகாப்பு
= சேர்மானம் (த) → சர்மன் (ச)

**சல் – Sal** = அசைவு
= (சல) சலப்பு (த) → சல் (ச)

**சல – Sala** = விலங்கு (ஊர்தி), கழுதை, ஒட்டை
= செல் (த) → சல (ச)

**சலப – Salabha** = வெட்டுக்கிளி
= செல் + தாவு கின்ற
= செல் தாவு (த) → சலப (ச)

**சவ – Sava** = பிணம், உயிரற்ற உடல்,
= சாய் – சாய்வு – சாவு
= சாவு (த) → சவ (ச)

**சச – Sasa** = முயல் (விரைவு, தொலைவு)
= சேய் – சேய்மை = தொலைவு
= விரைந்து ஓடுதலைக் குறித்தது
= சேய்மை (த) → சச (ச)

**சசி – Sasi** = நிலவின் ஒளி, நிலவு
= நிலவில் முயல் இருப்பதான கற்பனை
= சேய்மை (த) → சசி (ச)

**சாக – Saaka** = குடில், குடிசை
= சாகை (சாய் + கை) = குடிசை
= சாகை (த) → சாக (ச)

**சகட – Sakata** = வண்டி
= சாய்கட = உருண்டு செல்
= சாய்கடம் (த) → சகட (ச)

**சாக்ய – Saakya** = வேளாண்மை செய்வோர், எளியோர்
= சாகையில் குடியிருப்போர்
= சாகை (த) → சாக்ய (ச)
= சாக்கிய முனி = புத்தர், எளிய துறவி

**சாட – Saata** = நீண்ட, நெடிய
= சடை (த) → சாட (ச)

**சாத்ய – Saatya** = நீண்ட, நேர்மையான,
= சடுத்தல் = விரிதல்
= சடுத்தல் (த) → சாத்ய (ச)

**சாண – Saana** = கூர்மையான, அரைக்கும் கல் (grinder)
= சாணை (த) → சாண (ச)

**சாட – Saata** = மறுப்பு, வெறுப்பு
= சாடு (த) → சாட (ச)

**சாந்தா – Saanta** = அமைதிப் படுத்து
= செம்மை தா – செந்தா= அமைதியைக் கொடு
= செந்தா (த) → சாந்தா (ச)
= Sam என்ற (ச) சொல்லின் நீட்சி

**சாப** – **Saapa** = திட்டு
= செப்பு (த) → சாப (ச)

**சாரீர** – **Saarira** = உடல் (body)
= சேர் + இரு = சேர்ந்திருத்தல்
= தசையும் எலும்புமான இணைப்பு
= சேர் இரு (த) → சாரீர (ச)

**சாரங்க** – **Saaranga** = அம்பு போல் நீண்டிருக்கும் கொம்பு
= சார் அங்கம் (த) → சாரங்க (ச)

**சால** – **Saala** = வீடு
= சாலை (த) → சால (ச)

**சாலார** – **Saalaara** = மேல் மாடி – ஏணி (சாளரம்)
= சாலாரம் (த) → சாலார (ச)

**சாலி** – **Saali** = ஒரு வகை நெல்
= சாய்நெல் – சாலி
= சாலி (த) → சாலி (ச)

**சாஸ்வத** – **Saasvata** = எப்போதும், முடிவுறாத
= சாய்தல் + வடுத்தல் = நீட்சி
= சாய்வடு (த) → சாஸ்வத (ச)

**சாஸ்** – **Saas** = சொல், செய் (do)
= செய் (த) → சாஸ் (ச)

**சாஸ்திர** – **Saastra** = செய்திறன், ஆளுமை, ஆட்சி
= செய்திறம் (த) → சாஸ்த்திர (ச)

**சிக்ய** – **Sikya** = முடிச்சு, சுற்று, சிக்கல், மயிர்.
= சிக்கு – சிக்கல் (த) → சிக்ய (ச)

**சிக்ஷ்** – **Siksh** = சிக்கச் செய், பிடி, தெரிந்துகொள்
= சிக்கச் செய் (த) → சிக்ஷ் (ச)
= சிக்ஷ் (ச) = கல்வி, அறிவு, படிப்பு
= சிக்ஷா (ச) = கற்பித்தல்

**சிக்க** – **Sikha** = தலைமயிர்
= சிக்கம் = தலை (மயிர்)
= சிக்கம் (த) → சிக்க (ச)

= சிக் (sikh) = தலைமுடியை வெட்டாதவர்
= சீக்கியர்

**சிக்ரு – Sigru** = விதை, சிறிய, சின்ன
= சிக்கு = சிறிய (சிக்க = கன்னடம்)
= சிக்குஉரு – சிக்குரு = விதை
= சிக்குரு (த) → சிக்ரு (ச)

**சித – Sita** = வெண்மை
= சுதை = வெண்மை
= சுதை (த) → சித (ச) → சீதா (ச)

**சினி = Sini** = உயர்வு, பெருமை, தலைவன்
= சேண் – சேணம் = உயர்வு, மேன்மை
= சேண் (த) → சினி (ச)
= சினிவாச (Sinivasa) = சீனிவாசன்

**சிபி – Sibi** = சோழமன்னன் (பெரிய கொண்டைக்காரன்)
= மயிர் முடிச்சு (கொண்டை), சிறிய மூடை
= சிப்பம் = சிறுமூடை, சிப்பி = சிறு உயிரினம்
= சிப்பி (த) → சிபி (ச)

**சிரஸ் – Siras** = தலை, மேலே
= சேர் = கூட்டு, குவி
= தலை = மூளை
= சேர் (த) → சிரஸ் (ச)

**சிலா – Sila** = கல், பாறை
= சிலை = பாறை
= சிலை (த) → சிலா (ச)

**சில்ப – Silpa** = சிலையினின்றும் உருவாக்கப்பட்ட
= சில் + பொம்மை = சிற்பம்
= சிற்பம் (த) → சில்ப (ச)

**சில்பி – Silpi** = சிலை செய்வோன்
= சிற்பி (த) → சில்பி (ச)

**சிவ – Siva** = சிவன்
= செம்மை – சிவப்பு – சிவன்
= சிவன் (த) → சிவ (ச)

**சிசு – Sisu** = குழந்தை
= சேய் (த) → சிசு (ச)
= சிசுன (ச) = ஆண்குறி

**சிஷ்ய – Sishya** = சிறியவன், மாணவன்
= சேய் என்பதே இதற்கும் மூலச்சொல்லாகும்

**சிக் – Sik** = சிறிய (மழைத்துளி, பனித்துளி)
= சிக்க (த) → சிக் (ச)
= சிக்க (கன்னம்) = சிறிய

**சித்தள – Sithala** = சிறு துளி (கொப்புளம்)
= சித்தளி = சிறு துளி
= சித்தளி (த) → சித்தள (ச)

**சிர்ன – Sirna** = சிதைவு, அரைப்பு
= செரி (மானம்) = உணவு அரைக்கப்படுவது
= செரி (த) → சிர்ன (ச)

**சில – sila** = செலவு, பயன்பாடு
= செலவு, சிலவு (த) → சில (ச)

**சுக** – Suka = ஒளிர்தல்
= சொக்கு (த) → சுக (ச)

**சுக்ர – Sukra** = ஒளிர்தல் (சுக்கிரன் – வெள்ளி)
= சொக்கு – சொக்கன் = ஒளியாகிய சிவன்
= சொக்கரன் (த) → சுக்ர (ச)

**சுக்ல – sukla** = அழுக்கற்ற
= சொக்கு (த) → சுக்ல (ச)

**சுத் – Sudh** = தூய்மை (சுத்தம்)
= சுதை = வெண்மை, தூய்மை
= சுதை (த) → சுத் (ச)

**சுத்த** – சுத்தி – **Suddha – Suddhi** = தூய்மையான
= சுதை (த) → **சுத்த (ச)**

**சுனா – Suna** = வானவில் (இந்திரவில்)
= சுனை – சுனுப்பு – சுன்னுதல் = வளைதல்
= சுனி (த) → சுனா (ச)

**சுனக** – **Sunaka** = நாய், வளைவான வால்
= சுனகு = வளைவு
= சுனகு (த) → சுனக (ச)

**சுன்ய** – **Sunya** = ஒன்றுமில்லாமை (வளைவு, வட்டம்)
= சூனியம் (த) → சூன்ய (ச)
= பாழ் என்ற தமிழ் எண் (0)

**சுப்** – **Sub** = அழகு, ஒளி, அணி
= சுவை (த) – சுப் (ச)

**சுல்கா** – **Sulkaa** = சில்லரைப் பணம்
= சில்லறைக் காசு (த) → சுல்கா (ச)

**சூன்** – சூன – **Suna** = வளைந்து பெருத்தல்
= சூன் (வயிறு) = பெருத்த
= சூன் (த) → சூன (ச)

**சூத்ர** – **Sudra** = நான்காம்சாதி
= சூத்திரன் (த) → சூத்ர (ச)
= சூழ் + திறன் = சூத்திறன் எனவும் கொள்க

**சூர** – **Sura** = சூரன்
= சுள் – சூர் – சூரன் = ஆற்றலாளன்
= சூரன் (த) → சூர (ச)

**சூர்ப்ப** – **Surpa** = முறம்
= சூர்ப்படம் (த) → சூர்ப்ப (ச)

**சூல** – **Sula** = கூர்மை, வேல், சூலம்
= சுள் – சூல் – சூல – சூலம்
= சூல் (த) → சூல (ச)

**சிரிங்கார** – **Sringara** = இணைப்பு, காமம்
= சேர்கரம் (த) → சிரிங்கார (ச)

**சேகர** – **Sekhara** = தலை, உச்சி, முடி
= சிக்கம் (த) → சேகர (ச)

**சேய** – **Seya** = உறக்கம், தூக்கம்
= சாய (த) → சேய (ச)

**சேய்ல – Saila** = கல்லில் உருவாக்கப்பட்ட
= சிலை (த) → சேய்ல (ச)

**சோக – Soka** = இன்னல், இறக்கம், தாழ்வு, களைப்பு.
= சாய்கை (த) → சோக (ச)

**சோன – Sona** = சிவப்பு
= சுல் – சுண் – சோண் – சோண = சிவப்பு
= சோண் (த) → சோண (ச)

**சோதன – Sodhanda** = தூய்மைப் படுத்துதல்
= சுதை (த) → சோதன (ச)

**சியாம – Syaama** = கருமை
= மை = கருமை; யாமை = கருமை
= யாமை (த) → சியாம (ச)

**சியாமளா – Syamala** = கருமை நிறப் பெண்

**சிரம – Srama** = மயக்கம், உழைப்பு
= சேர் + மை = மை = மயக்கம்
= சேர்மை (த) – சிரம (ச)

**சிரவண – Sravana** – காது,
= சிறுவண்ணம் (த) → சிரவண

**ஸ்ர – Sra** – சூடு, வெப்பம்
= சுள் – சூர் – சுரம்
= சுரம் (த) → ஸ்ர (ச)

**ஸ்ரீ – Sri** = மேன்மை, திரு
= சீர் (த) → ஸ்ரீ (ச)

**ஸ்ரீமத் – Srimat** = அழகான, விருப்பமான
= சீர்மதி (த) → ஸ்ரீமத் (ச)

**ஸ்லோக – Sloka** = ஒலி, கல் ஒலி
= சிலை (த) → ஸ்லோக (ச)
= சோக – ஸ்லோக எனப்பட்டது (ச)
= இச்சொல்லை வால்மீகி உருவாக்கினார்.

## ஷ - Sha

**ஷடக** - **Shadak** = நீளமான பாம்பு
= சடை (த) → ஷடக (ச)

**ஷண்ட** - **Shanda** = கூட்டு, இணைப்பு
சந்தி - சந்திப்பு (த) → ஷண்ட (ச)

## ச - Sa

**சம்** - **Sam** = செய், வணக்கம் செய்
= செய்மை (த) → சம் (ச)
= சம் அல்லது செய்மை (doing) முன்னொட்டுச் சொல்லாகும்.

**சம் யுக்த** - **Samukta** = இணைப்பு செய்
= உத்தி (த) → யுக்த (ச)

**சம்பாக்** - **Sam Vac** = பேசுதல்
= வாக்கு (த) → வாக் (ச)

**சம்வர்ணன** - **Sam Varnana** = விரித்தல்
= வண்ணனை (த) → வர்ணனை (ச)

**சங்க** - **Sanga** = இணைப்பு
= சங்கம் (த) → சங்க (ச)
= சங்கம் தமிழ்ச் சொல்லே

**சடா** - **Sataa** = நீண்ட மயிர்
= சடை (த) → சடா (ச)

**சடா** - **Sadaa** = தொடர்ந்த
= சடை (த) → சடா (ச)

**சபா** - **Sabha** = சங்கம், கூட்டம்
= அவை (த) → சபா (ச)

**சமி** - **Sami** = சரிசெய்தல்
= சமை (த) → சமி (ச)

**சம் - உத்ர** - **Samudra** = இணைப்பு, நீர் சேர்க்கை
= உத்ர = நீர், கடல்
= திரை (த) - உத்ர (ச)

**சகர** – **Saraka** = நகர்வு, அசைவு
= சருக்கு (த) → சரக (ச)

**சரஸ்** – **Saras** = வழிந்தோடும் நீர்
= சருக்கு (த) → சரஸ் (ச)
= சரஸ்வதி = நீர்நிலை

**சர்ப்ப** – **Sarpa** – ஊர்தல்
= சாரை (த) → சர்ப்ப (ச)

**சலா** – **Sala** = நீர்
= செல் (த) → சலா (ச)

**சாய** – **Saaya** = மாலை, சாயுங்காலம்
= சாய் (த) → சாய (ச)

**சாயம்** – **Saayam** = மறைகின்ற
= சாயும் (த) → சாயம் (ச)

## ஹ – Ha

**ஹ** – **Ha** = தமிழ்வழக்கில் இல்லாத ஒலி
= அ அல்லது எ என்ற ஒலியின் திரிவு

**ஹட** – **Hata** = தாக்கு, சொல்
= அடி (த) → ஹட (ச)

**ஹடி** – **Hati** = அடி (த) → ஹடி (ச)

**ஹனுமத்** – **Hanumat** = தாடையுள்ள (Jaws)
= மடிப்பு (த) → மத் (ச)

**ஹர** – **Hara** = சிவன்
= அரன் (த) → ஹர (ச)

**ஹரி** – **Hari** = சிவப்பு
= அர – அரி – அரத்து
= அரி (த) → ஹரி (ச)

**ஹல** – **Hala** = நீர், அலை
= அலை (த) → ஹல (ச)

**ஹலி** – **Hali** = ஏர், அழித்தல், வேளாண்மை
= அழி (த) → ஹலி (ச)

**ஹால கால – Haala kala** = நஞ்சு
= ஆலம் = நஞ்சு; காலம் = இறப்பு
= ஆலகாலம் (த) → ஹாலகால (ச)

**ஹவான – Havana** = தீ (அக்கினி)
= வானத்தீ (த) → ஹவான (ச)

**ஹவிர் – Havir** = படைப்புப் பொருள்
= அவி (த) → ஹவிர் (ச)

**ஹா – Haa** = வியப்புக்குறி
= ஆ (த) → ஹா (ச)

**ஹின்ச – Hinsa** = இடையூறு
= இன்னல் (த) → ஹின்ச (ச)

**ஹின்ட் – Hind** = நகர்வு
= சிந்து – இந்து (த) → இன்ட் (ச)

**ஹிட – Hita** – இடம் (த) → ஹிட (ச)

**ஹிம – Hima** = பனித்துளி
= இம்மி = சிறுதுளி
= இம்மி (த) → ஹிம (ச)

**ஹிர – Hira** = அரிமா, சிங்கம்
= அரி (த) → ஹிர (ச)

**ஹுட – Huta** = வெப்பம்
= சூடு (த) → ஹுட (ச)

**ஹுடுக்க – Hudukka** = சிறுபறை, உடுக்கை
= உடுக்கை (த) → ஹுடுக்க (ச)

**ஹுண்டி – Hundi** = உணவு, சோறு
= உண்டி (த) → ஹுண்டி (ச)

**ஹுண – Huna** = குறைவு, சிதைவு, காட்டுமக்கள்
= ஊனம் (த) → ஹுண (ச)

**ஹ்ரித – Hrita** = நகர்வு
= இரிதல் (த) → ஹ்ரித (ச)

**ஹ்ரிதய – Hridaya** = இதயம்,
= இரிதல் = ஒழுக்கு, நீர்ப்போக்கு
= இரிதல் (த) → ஹ்ரித (ச)

**ஹெத் – Heth** – ஏமாற்றுக்காரன்
= எத்து – எத்தன் (த) → ஹெத் (ச)

**ஹெல் – Hel** = சினம், சிவப்பு
எல் (த) → ஹெல் (ச)

**ஹெடி – Heti** = தாக்குதல், தாக்கும் கருவி
= இடி (த) → ஹெடி (ச)

**ஹேது – Hethi** = ஒரு செயலுக்கான மூலம் (ஏது)
= யாது (த) → ஹேது (ச)

**ஹேமந்த – Hemanta** = பனிக்காலம்
= இம மாதம் (த) → ஹேமந்த (ச)

**ஹேமவதி – Hemavati** = பனிமகள்
= இம வதி (த) → ஹேமவதி (ச)

**ஹோட – Hoda** = மரக்கலம்
= ஓடம் (த) → ஹோட (ச)

**ஹோத்ரி – Hotri** = தீக்கையன், படைப்பவன், பூசாரி
= ஓந்திரி (த) → ஹோத்ரி (ச)

**ஹோம – Homa** = அவி செலுத்துதல், (ஓமம்)
= ஓம்பு – ஓம்புதல் (த) → ஹோம (ச)

**ஹோர – Hora** = காலம், நேரம்
= ஓரை (த) → ஹோர (ச)

**ஹோலக – Holaka** = ஒலித்தல், கத்துதல்
= ஓலம் (ஆலோலம்) = ஒலிப்பு

குறிப்பு:

1. இந்நூலில் 1600 சமற்கிருதச் சொற்கள் விளக்கப்பட்டுள்ளன.
2. மேலும் ஓராயிரம் சமற்கிருதச் சொல்களுக்கான விளக்கம், ஆசிரியரின் பல்வேறு நூல்களில் சொல்லப்பட்டுள்ளன.

# முடிவுரை

தமிழ் மூலத்திலேயே சமற்கிருதச் சொற்கள் உள்ளனவா என்பது பலருக்கு வியப்பாகக் கூட இருக்கலாம். அதற்கான கரணியம் யாதெனில், சமற்கிருத மூலத்திலிருந்தே தமிழ்ச் சொற்கள் பிறந்தன என்ற தவறான சிந்தனைக்குத் தமிழர்கள் தள்ளப்பட்டனர். ஓராயிரம் ஆண்டுக்கால சிந்தனை, தமிழர் களைத் தவறாக வழி நடத்தி வந்துள்ளது. தமிழில் ஏராளமான சமற்கிருதச் சொற்கள் கலந்துள்ளன என்பதை தமிழர்கள் ஏற்றுக் கொண்டார்கள். அவை உண்மையில் சமற்கிருதச் சொற்கள் தாமா என்பதை எவரும் சிந்திக்கவில்லை. தமிழ்ச் சொற்களால் உருவாக்கப்பட்ட சமற்கிருத மொழி, தமிழ்ச் சொற்களைச் சுருக்கியும் சிதைத்தும் தன் போக்கில் மாற்றிக் கொண்டது. அத்திரிவுச் சொற்களை, மீண்டும் தமிழ் நாட்டில் புகுத்தி, அவை புதிய சொற்கள் போன்று அடையாளப் படுத்தி விட்டனர்.

அக்காலத்தில் தமிழ்ச் சொற்களைச் பிரித்துப் பார்த்துப் பொருள் சொல்லும் அளவு கோலும் அறிவுத் திறனும் குறைந்தே காணப்பட்டன. ஏராளமான தமிழ்த்திரிவுச் சொற் களையே மூலம் எனக் கருதிய தமிழர்கள், அவற்றைத் தமிழ் வழியில் சொல்லி வைத்தனர். காலப் போக்கில் அவை கல்வி யறிவில்லாதவர்களிடம் கலந்து போயின. ஆட்சி அதிகாரத்தி லிருந்த ஆங்கிலேயர்களும் அவ்வாறான திரிபுச் சொற்களை ஏற்றுக் கொண்டனர். இரு நூறு ஆண்டுகள் ஆண்ட ஆங்கி லேயரின் தாய் மொழியான ஆங்கிலம், அடித்தட்டு மக்க ளிடையே கூட வேரூன்றிப் போனது. இப்போது தமிழ் நாட்டின் நாட்டுப் புறங்களில் கூட, நூற்றுக்கு இருபது ஆங்கிலச் சொற் களைப் பயன்படுத்துவோர் உள்ளனர். அவர்களுக்கு ஆங்கிலம் பற்றி எதுவும் தெரியாது என்ற நிலையிலும் ஆங்கிலச் சொற் களைப் பயன்படுத்துகின்றனர். சித்தாள் வேலைக்குச் செல்லும் பெண்கள்கூட, “டெய்லி எங்கே வேலை கிடைக்கிறது?” என்று

கூறுவதைக் காணலாம். பள்ளிக்கூடம் என்ற சொல்லைப் பலர் மறந்தே போய்விட்டனர். கல்லூரி என்ற சொல் அவர்கள் நாவில் ஒலிக்கப்படுவதில்லை. துணை வேந்தர் என்று படித்த வர்கூட சொல்வதில்லை. வி.சி. என்றே சுருக்கிக் கூறுகின்றனர். பெரிய அரசியல் தலைவர்கள் கூட, தங்களுடைய நேர்காண லில் ஏராளமான தமிழ்த் திரிவுச் சொற்களையே பயன்படுத்து கின்றனர். ஒரு நிகழ்வை ஆராயாமல் கூறுபவர்களை, "எடுத் தேன் கவிழ்த்தேன்" என்றோ, "வாய்புளித்ததோ மாங்காய் புளித்ததோ" என்று குறிப்பிடுவது தமிழர் மரபு. காலம் கால மாகப் பயன்பட்டு வரும் இச் சொற்றொடர்களை எத்தனை பேர் பயன் படுத்துகின்றனர். "அநாயாசமாக" என்ற சொல்லை இவற்றுக்கு மாற்றாகப் பயன் படுத்துகின்றனர்.

ஒரு மொழியைச் சிதைப்பதற்கு, வேற்று மொழிச் சொற் களை அம்மொழிக்குள் புகுத்துவது என்பது ஓர் உத்தியாகும். பேச்சு வழக்கில் தன் மொழிச் சொற்களை இழக்கும் ஒரு மொழி நாளடைவில் தனது தனித்தன்மையை இழந்துவிடும். பலர் பயன்படுத்தும் சொற்கள், தமிழ்ச் சொற்களா அல்லது திரிவுச் சொற்களா என்ற சிந்தனை இருப்பதில்லை. தனித் தமிழில் பேசுபவரைப் புதுமையாகவும், நகைப்பாகவும் நோக் குகின்றனர். பல மொழிகளைப் படிப்பது அறிவுக்கு வளர்ச் சியைத் தரும். தமிழில் அம்மொழிச் சொற்களைக் கலந்து பேசுவது, தமிழுக்குச் சிதைவை ஏற்படுத்தும். அரசு வெளியிடு கின்ற ஆணைகள், அறிவிப்புகள் போன்றவைகளில், தனித் தமிழைப் பயன்படுத்த வேண்டும். ஊடகங்களில் தமிழ்ச் சொற் களையே பயன்படுத்த வேண்டும். தொடக்கத்தில் குழப்பத்தைக் கொடுத்தாலும், காலப் போக்கில் தனித் தமிழ் வழக்கு நிலைக்கும். இவ்வாறான பணிகளில், தனித்தமிழில் எழுதும் ஆற்றலுள்ளவர்களை அரசு பணியமர்த்த வேண்டும். டாஸ் மாக், நியாய விலைக்கடை என்றவாறு சொல்லப்படும் நிலை மைகள் மாற வேண்டும்.

சமற்கிருத அகராதியிலுள்ள சொற்களை ஆய்வு செய் கின்ற போது, சமற்கிருத மொழி எவ்வாறு தமிழோடு நெருங் கிய தொடர்பு கொண்டுள்ளது என்பதை உணர முடிகின்றது. வியப்புக்குரிய வகையில் தமிழ்ச் சொற்கள், அனைத்து சமற் கிருதச் சொற்களுக்கும் மூலமாக உள்ளன. இரிக்கு வேதத்தில் 300 சொற்கள், மற்ற சமற்கிருத இலாக்கியங்களில் 500

சொற்கள் என கணக்கிட்டுச் சிலர் தமிழ்ச் சொற்களை இனம் காண்கின்றனர். இரிக்கு வேதச் சொற்கள் அனைத்துமே தமிழின் வேரினையும் மூலத்தையும் தொட்டு நிற்கின்றன என்ற உண்மையை உன்னிப் பார்த்தவர்களால் உணர முடியும்.

சமற்கிருதச் சொற்களில் பல, தமிழைப் போலாவே மூலச் சொல்லினின்றும் விரிந்துள்ளன. சம் என்பது, செம்மை என்ற தமிழ்ச் சொல்லின் சமற்கிருதத் திரிபாகும். இச்சொல்லை முன் னொட்டாகக் கொண்டு ஆயிரத்திற்கு மேற்பட்ட சொற்கள் சமற்கிருதத்தில் உள்ளன. பல சொற்கள், பொதுவான பொருளைக் குறித்து, அப்பொருளுக்கேற்ற பிற சொற்களை யும் இணைத்துக் கொண்டுள்ளன. ப்ர (Pra) என்ற சொல்லை முன்னொட்டாகக் கொண்டு, எண்ண முடியாத சமற்கிருதச் சொற்கள் உள்ளன. தமிழில் கல் என்ற வேர்ச் சொல், தமிழில் பல நூறு சொற்களை உருவாக்கியுள்ளதை அறியலாம்.

சோக என்ற சமற்கிருதச் சொல்லுக்கு, இன்னல் இடர்ப் பாடு, உடற்சுருக்கம் என்றவாறு பொருள் சொல்லப்பட்டுள்ளது (அகராதி – ப. 1104) சுருக்கு – சுருக்கம் – சுக்கு என்றவாறு தமிழில் பொருள் கொள்ளப்பபட்ட சொல்லே, சோக எனத்திரிந்துள்ளது. அ என்ற முன்னொட்டை இணைத்து, அசோக (மகிழ்வான, விரிந்த, மலர்ந்த) என்று பொருள் அறியப்படுகின்றது. வால்மீகி ஒரு வேடன், திருடன் என அறியப்படுகிறான். அவன் உயிர்களைக் கொன்ற போது அவை அடையும் இன்னல்களைக் கண்டான். சோக என்ற சொல்லால் அவை விளக்கப்படுகின்றன. அவ்வுயிர்கள் பெருத்த ஓசையிட்டு இறக்கும் காட்சியைக் கண்ட வால்மீகி, அவ் வொலியை சுலோக (Sloka from Soka, அகாரதி ப. 1104) என்று குறிப்பிடுகின்றான். சுலோக என்ற சொல்லை, வால்மீகியே உருவாக்கியதாக அகராதி கூறுகிறது. அது ஒலி என்றே சொல்லப்பட்டு, பின்னர் பாடல் வரிகளும் சுலோக என்றே சொல்லப்பட்டன. சுக்கு (த) → சோக → சுலோக என நீண்டது. சுக்கு என்ற தமிழ் மூலத்திற்கும் சுலோக என்ற சமற்கிருதச் சொல்லுக்கும் பொருள் அளவில் தொடர்பில்லை; என்றாலும் சுலோக என்ற சொல்லுக்கான மூலச் சொல் சுக்கு என்பதே. இவ்வாறு ஆயிரக் கணக்கான சமற்கிருதச் சொற்கள், தமிழ் மூலத்திலேயே உள்ளன என்பதை ஆய்வு செய்யுங்கால் அறியலாம்.

இந்நூலில் விளக்கப்பட்டுள்ள சொற்கள், சுருக்கமாகவே சொல்லப்பட்டுள்ளன. இதனை முழுவிளக்க நூல் என்று கூற இயலாது. எவ்வாறெனில் ஒவ்வொரு சொல்லையும் விளக்கு வதற்குப் பல பக்கங்கள் தேவைப்படும். இந்நூல் சமற்கிருதச் சொற்களை ஆய்வு செய்ய முற்படுவோருக்கு ஒரு சிறிய வழி காட்டியாக அமையும். இந்நூலில் கோடிட்டுக் காட்டப் பட்டுள்ள சொற்களை, சமற்கிருத அகராதி, இலக்கியங்கள் ஆகியவற்றின் துணைகொண்டு மேலும் ஆய்வு செய்ய, தூண்டுவதாக அவை அமையும். ஒவ்வொரு சொல்லுக்கும் ஒரு வரலாறு உண்டு என்பதால், தமிழ்ச் சொல்லின் உண்மைப் பொருளோடு, அது விரிவடைந்த சொற்களையும் கருத்தில் கொண்டு, சமற்கிருதச் சொற்களை அணுக வேண்டும். சமற் கிருதத்துக்கும் தாய் மொழி தமிழே என்பதை, சமற்கிருதச் சொல் ஒவ்வொன்றையும் உன்னிப் பார்த்து ஆய்வு செய் பவர்களால் உணர முடியும்.

இந்நூலில் விளக்கப்பட்டுள்ள சொற்களுக்கு, பாவாணரின் சூத்திரமே பயன்படுத்தப்பட்டது என்பது பெருமைக்குரிய செய்தியாகும். சமற்கிருதம் மட்டுமின்றி, உலகின் பல்வேறு மொழிச் சொற்களையும் தமிழ் மூலத்தில் காண்பதற்கு பாவாணரின் வழி காட்டுதலே முதன்மையானது ஆகும். அவருடைய சூத்திரம் இன்றி எவராலும் பிற மொழிச் சொற் களை அடையாளம் காண இயலாது. இந்நூலில் கொடுக்கப் பட்டுள்ள விளக்கங்கள் சரியே எனக் கொள்ளப் படுமானால் அப்பெருமைகள் அனைத்தும் பாவாணரையும் சிறுமைகள் என்னையுமே சாரும் என முடிக்கின்றேன்.

## துணை நின்ற நூல்கள்

*முதல் நூல்*= A Sanskrit - English Dictionary,
M. Monier - Williams, M.A., K.C.I.E,
P rofessor of Sanskrit, Boden.,
Motilal Banarsidass P ublishers PVt. Ltd.,
Delhi

## துணை நூல்கள்

*தொல்காப்பியம்,*
*கடைக் கழக நூல்கள்,*
*பாவாணரின் நூல்கள்.*

